# கம்யூனிஸ்ட் கட்சியின்

# தேர்தல் அறிக்கை




ஜனசக்தி பிரசுராலயம்

2-ம் பதிப்பு, நவ. 51]

[விலை 2 அணா.

# இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தேர்தல் அறிக்கை

ஒரு சில மாதங்களுக்குப் பின்னால், நம் மக்களில் 19 கோடிப் பேர் ஓட்டுச் சாவடிகளுக்குச் செல்வார்கள். இன்றைய சர்க்காரைப்பற்றியும், கடந்த 5 வருட காலத்தில் அவர்கள் கடைப்பிடித்த கொள்கைகளையும் நடைமுறைகளையும் பற்றியும் தங்களுடைய தீர்ப்பை அளிக்கும்படி மக்கள் கேட்கப்படுவார்கள். இன்றைய ஆட்சி முறை இன்னும் தொடர்ந்து நீடிக்க வேண்டுமா, அல்லது அதை அகற்றிவிட்டு ஒரு புதிய ஆட்சியை ஏற்படுத்த வேண்டுமென்று விரும்புகிறார்களா என்பதை அவர்கள் பிரகடனப்படுத்தும்படி கேட்கப்படுவார்கள்.

இன்றைய சர்க்காரின் தலைவர்கள் தங்களுடைய தேர்தல் பிரகடனத்தை வெளியிட்டிருக்கிறார்கள். மகத்தான சாதனைகள் புரிந்திருப்பதாக பறைசாற்றி வருகிறார்கள்; நாட்டிற்கு சுதந்திரம் பெற்று விட்டோம், சுதேச சமஸ்தானங்களை மாகாணங்களுடன் இணைத்துவிட்டோம், குட்டி சமஸ்தானங்களையெல்லாம் ஒன்றாக ஐக்யப்படுத்திவிட்டோம், நிலச் சீர்திருத்தம் கொண்டுவந்திருக்கிறோம், உணவுப் பெருக்கு இயக்கம் நடத்தியிருக்கிறோம்; பல மின்சாரத் திட்டங்களையெல்லாம் போட்டிருக்கிறோம்; என்றெல்லாம் தம்பட்டமடித்து வருகிறார்கள். தங்களால் முடிந்ததெல்லாம் செய்திருப்பதாக முரசறைந்து வருகிறார்கள். தங்களிடம் மேலும் நம்பிக்கை வைத்து, மீண்டும் தங்களுக்கே ஓட்டளித்தால் இன்னும் அதிகமான காரியங்களை சாதிக்க முடியுமென்று வாக்களிக்கின்றனர்.

ஆனால், அவர்கள், உண்மையில் என்ன செய்திருக்கிறார்கள்? அவர்களுடைய உண்மையான சாதனைகள் என்ன? இன்னும் பலபல காரியங்கள் செய்வதாக அவர்கள் வாக்குறுதி கொடுப்பதின் அர்த்தமென்ன?

## "காங்கிரஸின் சாதனைகள்"

சர்க்காரால் கொடுக்கப்பட்டுள்ள புள்ளி விவரங்களிலிருந்தே கூட அதற்கு பதிலைத் தெரிந்து கொள்ளலாம் என்பது மட்டுமல்ல; அந்தப் புள்ளி விவரங்களிலே எப்படி வேண்டுமானாலும் தில்லுமுல்லு செய்யலாம்; எவ்வளவு கிணறுகள் வெட்டப்பட்டன, எவ்வளவு மரங்கள் நடப்பட்டன; சர்க்காரின் பல்வேறு திட்டங்களுக்கு எவ்வளவு பணம் செலவழிக்கப்பட்டது என்பதற்கெல்

லாம் விவரங்களைக் கொடுக்கும் கத்தை கத்தையான ரிபோர்ட்டு களிலிருந்தும் அதற்குப் பதில் தெரிந்துகொள்ளலாம் என்பது மட்டுமல்ல; எங்கு சென்றாலும் தென்படும் ஒட்டிப்போன கன்னங்களிலும், துவண்டுபோன உடல்களிலும் அதற்கு பதிலைத் தெரிந்து கொள்ளலாம். தங்களுடைய உடல்களை மறைக்கக்கூட முடியாமல் அரை நிர்வாணமாக அணிந்திருக்கும் கிழிந்த துணிகளிலும் அதற்கு பதிலைக் காணலாம். தங்களையும், தங்கள் குழந்தைகளையும் போஷிப்பதற்கு உணவில்லாமல் பெற்றோர்கள்-ஆண்களும் பெண்களும் தற்கொலை செய்து கொள்வதைப்பற்றி தினசரி பத்திரிகைகளில் வெளியாகும் செய்திகளிலும் அதற்கு பதிலைப் பார்க்கலாம்.

தங்களின் மேல் சுமத்தப்பட்டுள்ள நரக வாழ்க்கையை சகிக்க முடியாமல் அதை எதிர்த்து மக்கள் போராடுமிடங்களிலெல்லாம் நடைபெறும் துப்பாக்கிப் பிரயோகங்கள், கண்ணீர் புகை தாக்குதல்கள், தடியடிப்பிரயோகங்கள், ஏராளமான பேர் கைதி செய்யப்படுவது, கூட்டங்களைத் தடைசெய்வது, சட்ட விரோதமாக்குவது முதலியவைகளிலும் அதற்கு பதிலைத் தெரிந்து கொள்ளலாம்.

காங்கிரஸ் ஆட்சியின் 5 வருடங்கள்-'சுதந்திரம்' கிடைத்தபின் கடந்த 4 வருடங்கள்-நம் நாட்டையும், நம் மக்களையும் படுநாசத்தின் விளிம்புக்குக் கொண்டுவந்து விட்டன- உணவுற்பத்தி, துணி உற்பத்தி, வாழ்க்கையின் ஒவ்வொரு அத்யாவசியப் பொருளின் உற்பத்தியும் குறைந்துவிட்டன. பீஹாரில் உணவுப் பஞ்சம் தலைவிரித்தாடுகிறது. ஒரு கோடி மக்கள் அங்குலம் அங்குலமாக சாவை நோக்கிச் சென்று கொண்டிருக்கின்றனர். விவசாயிகளில் பெருவாரியானவர்கள், நம் மக்களின் பெருந் தொகையினர் வாடகை, கடன், வரிச்சுமைகளின்கீழ் இன்னும் நசுக்கப்பட்டு வருகின்றனர். நிலச்சுவான்தார்கள் ஏழை விவசாயிகளை நிலங்களிலிருந்து ஏராளமாக வெளியேற்றி வருவதின் காரணமாக, தங்கள் தொகை சதா அதிகரித்துக்கொண்டேவரும் விவசாயத் தொழிலாளிகள், தங்களுடையவயிற்றுப் பசியைக்கூடப் போக்கிக்கொள்ள முடியாமல், கேவலமான வாழ்க்கை வாழ்ந்துவருகின்றனர்.

தொழிலாளிகளின் நிலைமையும் நாளுக்குநாள் மோசமடைந்து வருகிறது. விஷம்போல் ஏறிவரும் விலைவாசிகளை எட்டிப் பிடிக்க முடியாமல் அவர்கள் சம்பளங்கள் பின்தங்கியே நிற்கின்றன. உபாத்தியாயர்கள், குமாஸ்தாக்கள் ஆபீஸ் உத்தியோகஸ்தர்கள், தொழிலாளிகள் ஆகியோரின் வேலையில்லாப் பட்டாளம் நாளுக்கு நாள் பெருகி வருகிறது. எப்படியோ வேலையிலிருப்பவர்களும் கூட தங்களுடைய உண்மையான சம்பளம் நாளுக்கு

நாள் சரிந்துவருவதைப் பார்க்கின்றனர். அதிகரித்துவரும் கல்விச் செலவுகளை சரிக்கட்ட முடியாமல் மாணவர்கள் பள்ளிக் கூடங்களையும், கல்லூரிகளையும் விட்டு வெளியேறுகின்றனர். மூலப் பொருள்கள் கிடைப்பது அரிதாகிவருவதினாலும், அவை களின் விலைகள் அகாதமாக உயர்ந்து வருவதினாலும், கொள்ளை லாபக்காரர்களாலும், கள்ள மார்க்கட்காரர்களாலும் எல்லா சரக்கு களும் பதுக்கப்பட்டு வருவதினாலும் கைத் தொழிலாளிகள், சிறு உற்பத்தியாளர்கள், வர்த்தகர்கள் ஆகியோர் பாப்பர்களாகி வருகின்றனர், தங்களுடைய வீடுவாசல்களிலிருந்து நிர்பந்தமாக வெளியேற்றப்பட்ட லட்சக்கணக்கான, பாகிஸ்தானிலிருந்து வந் துள்ள அகதிகள், உணவும், வீடும், வேலையும் கிடைக்காமல் தெருத் தெருவாக, சந்து சந்தாக சுற்றிவருகின்றனர்.

இவ் விஷயங்கள் பூராவும் அனைவருக்கும் தெரிந்தவையே இவைகளை ஒவ்வொன்றாக சொல்லிக்கொண்டு போகவேண்டிய அவசியமேயில்லை. சுதந்திரமென்றால், சாதாரண மனிதன் பட் டினியோடும், நிர்வாணத்தோடும், தற்குறியாகவும், ஒடுக்கப்பட் டும், பிணியால் பீடிக்கப்பட்டும், ஒதுங்குவதற்குக் கூரையில்லாம லும் இருப்பதற்கு சுதந்திரம் என்பதை ஒவ்வொருவரும் உணர ஆரம்பித்துவிட்டனர்.

இந்தத் தொல்லைகளுக்கெல்லாம் அடிப்படையான காரண மென்ன ?

அன்னிய ஆட்சியை ஒழித்துவிட்டதாகவும், பிரிட்டிஷ் ஏகாதிபத்யவாதிகள் நம் மக்களை சுரண்டுவதற்கு முடிவு கட்டிவிட் டதாகவும் காங்கிரஸ் தலைவர்கள் ஜம்பமடித்து வருகிறார்கள். துன் பமும் பட்டினியும் இருப்பதை அவர்கள் ஒத்துக்கொண்டாலும், அதெல்லாம் ஒரு புதிய ஆட்சிமுறை தோன்றும்போது ஏற்படும் தவிர்க்க முடியாத பிரசவ வேதனையாகும் என்று கூறிவிடுகிறார் கள். மக்களுக்கு அதிக உணவு வேண்டுமென்றால் அவர்கள் அதிக மாக உற்பத்தி செய்யவேண்டும்; அவர்கள் அதிக கஷ்டப்பட்டு வேலை செய்ய வேண்டும்; அவர்கள் தியாகம் செய்யவேண்டும். எல் லாவற்றிற்கும் மேலாக அவர்கள் இன்றைய சர்க்காருடன் ஒத் துழைக்க வேண்டும்; எல்லா வர்க்கங்களும், பகுதிகளும், நாளைக்கு சுபீட்சம் பெறுவதற்காக இன்றைக்கு கஷ்டப்பட வேண்டும் என் பதுதான் காங்கிரசுக்கு வழிகாட்டும் சர்வோதயா திட்டத்தின் கொள்கை.

இந்த ஒவ்வொரு வாதமும் உண்மைக்குப் புறம்பானதாகும். சாதித்துவிட்டதாகச் சொல்லும் ஒவ்வொரு விஷயமும் பொய்யும் பித்தலாட்டமுமாகும்.

காங்கிரஸ் தலைவர்கள் நம் நாட்டுக்கு விடுதலையைப் பெற வில்லை. அவர்கள் நம்முடைய விடுதலைப் போராட்டத்தைத் காட்டிக் கொடுத்து விட்டார்கள். கடந்தகாலம் மாதிரி இப்பொழுதும் அன்னிய முதலாளிகளும், பிற்போக்கான இந்தியப் பணத்திமிங்கிலங்களும் நம்மக்களைக் கொள்ளையடிக்கவும் சுரண்டவும் அனுமதித்திருக்கிறார்கள். அவர்களே இந்தக் கொள்ளையில் பங்காளிகளாகச் சேர்ந்துவிட்டார்கள்.

## ஒரு தேச துரோக சர்க்கார்

மக்களுக்குக் கொடுத்த ஒவ்வொரு வாக்குறுதிக்கும் முரணாகவும், எந்த ஒவ்வொரு புனிதமான பிரகடனத்தையும் நடைமுறைக்குக் கொண்டுவருவதற்கு ஆயிரக்கணக்கான மக்கள் தங்கள் இன்னுயிர்களைத் தியாகம் செய்தார்களோ அந்த ஒவ்வொரு பிரகடனத்திற்கும் முரணான முறையில் நேரு சர்க்கார் இந்தியாவை பிரிட்டிஷ் காமன்வெல்த்தின் ஒரு பகுதி ஆக்கினார்கள்; பிரிட்டிஷ் மன்னரைத் தலைவராகக் கொண்ட அந்த காமன்வெல்தின் பல பாகங்களில் இந்தியர்கள் மிருகங்களைக் காட்டிலும் கேவலமாக தீண்டப்படாதவர்களாக நடத்தப்பட்டு வருகின்றனர். நம்முடைய கடற்படையும், விமானப்படையும் பிரிட்டிஷ் தளபதிகளின் ஆதிக்கத்திலிருக்கின்றன; நம்முடைய ராணுவம் பிரிட்டிஷ் ஆலோசகர்களாலும் பிரிட்டிஷ் நிபுணர்களாலும்தான் நடத்தப்பட்டு வருகிறது. நம்முடைய ஆயுதங்களும் பிரிட்டிஷ்காரர்களின் திட்டப்படியே, அவர்களாலேயே தயாரிக்கப்படுகின்றன.

நம்முடைய சுரங்கங்களையும் தோட்டக் காடுகளையும், நம்முடைய எண்ணைக் கிணறுகளையும், எண்ணை சுத்திகரிப்புச் சாலைகளையும், நம்முடைய சணல் ஆலைகளையும், நம்முடைய இன்ஜினீரிங் தொழில்கள் பலவற்றையும் இதர கம்பெனிகளையும் பிரிட்டிஷ் முதலாளிகளே தொடர்ந்து தங்களது உடமையாகவும், ஆதிக்கம் செலுத்தியும் வருகின்றனர். நம்முடைய அயல்நாட்டு வியாபாரத்தையும், நம்முடைய பாங்குகளையும், நம்முடைய நிதி நிலைமையையும் அவர்கள்தான் கட்டுப்படுத்தி வருகின்றனர். நம்முடைய நாட்டில் அவர்கள் போட்டுள்ள 600 கோடி ரூபாய் மூலதனத்தின் மூலமாகவும், தங்களுடைய மானேஜிங் ஏஜென்ஸி முறையின் மூலமாகவும் அவர்கள் கோடிக்கணக்கான ரூபாய்களை லாபமாகக் கொள்ளையடிக்கின்றனர்; அதன் காரணமாக நம்முடைய பொருளாதாரத்தை அவர்களின் மரணப் பிடிப்பிலே அமுக்கிவைத்து வருகின்றனர். நம் நாட்டுத் தொழில்களின் குரல்வளையை நெருக்கி, வளராமல் தடுத்து, நம்மை என்றும் பின்தங்கிய நிலை

யிலும், அவர்களைச் சார்ந்து நிற்கவேண்டிய நிலைமையிலும் வைத்துக்கொண்டு, நம்முடைய தொழில்களின் வளர்ச்சிக்கு அவசியமான இயந்திர சாதனப் பொருள்களைக் கொடுக்க மறுத்துக் கொண்டும் வருகின்றனர். கடந்த யுத்த காலத்திலே பொருள்களின் மூலமும், இதர சேவைகளின் மூலமும் சுமார் 1600 கோடி ரூபாய் நம் மக்களிடமிருந்து கொள்ளையடித்தனர்; அதைத் திருப்பிக் கொடுப்பதாக வாக்களித்திருந்தனர்; ஆனால் அதை அமுல் நடத்தவில்லை. அந்தத் தொகையை பாதிக்கும் குறைவாகக் குறைத்து அந்த மீதித் தொகையையும் நம்முடைய தேவைகளுக்கேற்ப கொடுப்பதற்கு மறுத்துவிட்டனர்.

இந்தியாவை என்றும் பிற்பட்ட நிலையிலும், பிரிட்டனைச் சார்ந்திருக்கும் நிலையிலும் அதாவது பிரிட்டிஷ் உற்பத்திப் பொருள்களுக்கு ஒரு வியாபாரச் சந்தையாகவும், அவர்களுக்கு வேண்டிய சரஸமான விலைகளில் மூலப் பொருள்களும், குறைந்த கூலியில் தொழிலாளிகளும் கிடைக்கும் சாதனமாக வைத்திருக்கவே கொளும்பு திட்டத்தைத் தயாரித்தனர்.

இந்த எல்லாத் திட்டங்களுக்கும், நம்முடைய பொருளாதாரத்தில் பிரிட்டிஷ்காரர்களின் ஆதிக்கம் தொடர்ந்து நீடிப்பதற்கும், நம்முடைய மக்களை பெருவாரியான அளவில் கொள்ளையடிப்பதற்கும், வஞ்சிப்பதற்கும், இந்தியாவானது தொடர்ந்து காலனி அந்தஸ்திலேயே இருப்பதற்கும், நேரு சர்க்கார் இஷ்டபூர்வமான பங்காளியாகவே இருந்து வந்திருக்கிறது. இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் மூலதனத்தைப் பறிமுதல் செய்வதற்குப் பதிலாக, இந்தியாவில் இன்னும் அதிக மூலதனத்தைப் போடும்படி பிரிட்டிஷ் ஏகாதிபத்ய வாதிகளையும், அமெரிக்க ஏகாதிபத்ய வாதிகளையும் நேரு சர்க்கார் கெஞ்சி வருவதுடன், அவர்களின் லாபங்களை இந்தியாவைவிட்டு வெளியேற்றிக்கொண்டு போகவும் வாக்குறுதி அளித்திருக்கிறது; பிரிட்டிஷ், அமெரிக்க ஏகாதிபத்ய வாதிகளுடன் தனக்குள்ள தொடர்பை அறுத்துக்கொள்ள அது மறுத்து விட்டது; நமக்குத் தேவையான இயந்திர சாதனப் பொருள்களை சப்ளை செய்யும் நிலைமையிலுள்ள ஜனநாயக நாடுகளுடன் நெருங்கிய வர்த்தகத் தொடர்புகள் ஏற்படுத்திக் கொள்ளவும் கூட அது மறுத்துவிட்டது. ஏகாதிபத்ய வாதிகளின் திட்டத்தை ஒப்புக்கொண்டு, அதை நேரு திட்டம் என்று கூறுகிறது.

பிரிட்டிஷ், அமெரிக்க ஏகாதிபத்யவாதிகளுடன் கட்டுண்டுள்ள நேரு சர்க்கார் இந்தியாவின் கனதொழில்களை-சுரங்கத்

தொழில், இயந்திரக் கருவிகளை உற்பத்தி செய்யும் தொழில், இரும்பு, உருக்கு இன்ஜினீயரிங் தொழில்கள், ரசாயனத் தொழில்கள் முதலியவைகளை வளர்ப்பதற்கு எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை. அவ்வாறு செய்வதின் மூலமே நம் நாடு பலம் வாய்ந்ததாகவும் சுதந்திரம் பெற்றதாகவும் ஆகமுடியும். உண்மையான முன்னேற்றத்திற்கு அதுதான் அடிப்படையை உண்டாக்கும். இந்தியாவில் ஏதோ ஏற்படுத்தியிருப்பதாகச் சொல்லப்படும் ஆட்டோமோபைல், லோகொமோடிவ் தொழில்களெல்லாம், பிரிட்டனிலிருந்தும், அமெரிக்காவிலிருந்தும், இறக்குமதி செய்யப்படும் மோட்டார் பகுதிகளை ஒன்று சேர்க்கும் தொழிற்சாலைகளே தவிர வேறொன்றுமல்ல. அத்தொழில்கள் அன்னிய முதலாளிகளுக்கும் இந்தியாவில் அவர்களின் ஏஜண்டுகளுக்கும் கொள்ளை லாபங்களைக் கொடுத்து ஏகாதிபத்யவாதிகளின் யுத்த இயந்திரத்திற்குத் தீனி போட உதவுகிறதே தவிர, நம் நாட்டைத் தொழில் மயமாக்க அது உதவாது. உலகத்திலேயே மிக வளம்பெற்ற இந்தியாவிலுள்ள மங்கனீஸ் சுரங்கங்களை நேரு சர்க்கார் அமெரிக்க ஏகாதிபத்யவாதிகளுக்கு அடகுவைக்க முன் வந்துள்ளது.

இந் நிலையில், இந்தியா உண்மையிலேயே ஒரு சுதந்திரமான நாடென்றும், இந்திய சர்க்கார், விடுதலை யடைந்த தேசத்தின் சர்க்கார் என்றும் யார் கூறமுடியும்?

நம் நாட்டின் பொருளாதாரத்தின்மீது ஆதிக்கம் செலுத்தவும், செல்வத்தைக் கொள்ளையடிக்கவும், பிரிட்டிஷ் ஏகாதிபத்யவாதிகளுக்கு நேரு சர்க்கார் அனுமதியளித்திருக்கிறது என்பது மாத்திரமல்ல; சுதேச மன்னர்கள், நிலப்பிரபுக்கள், இந்திய ஏகபோக முதலாளிகள், பணத்திமிங்கிலங்கள் ஆகியவர்களும் தங்களுடைய கொள்ளையைத் தொடர்ந்து நடத்தவும் அனுமதித்துள்ளது. தங்களுடைய சொந்த ஆட்சியை நிலை நிறுத்துவதற்காக பிரிட்டிஷ் ஏகாதிபத்யவாதிகள் ஏற்படுத்திய அமைப்பு பூராவையும் அது அப்படியே வைத்துப் பராமரித்துவருகிறது. ஆகவே, நமக்குக் கிடைத்துள்ளது சுதந்திரமல்ல; ஏற்பட்டுள்ள ஒரே மாறுதல் என்னவெனில் பிரிட்டிஷ் வைஸ்ராயும், அவர்களுடைய கவுன்ஸிலர்களுக்கும் பதிலாக இந்திய ஜனாதிபதியும், அவருடைய மந்திரிகளும் ஏற்பட்டிருப்பதும், வெள்ளை அதிகார வர்க்கத்திற்குபதிலாக, கருப்புநிற அதிகார வர்க்கம் ஏற்பட்டிருப்பதும், இந்திய மக்களிடமிருந்து அடிக்கப்படும் கொள்ளையில், ஏகாதிபத்யவாதிகளுடன் ஒத்துழைக்கும் இந்திய ஏகபோக முதலாளிகளுக்கு இன்னும் பெரிய பங்கும் கிடைத்திருப்பதும்தான்.

## நிலப்பிரபுக்கள், ஏகபோக முதலாளிகள் சர்க்கார்.

*யதேச்சாதிகார மன்னர்களின் ஆட்சியையும் சுரண்டலையும் நேரு சர்க்கார் ஒழிக்கவில்லை; ஆனால் அதற்குமாறாக, சிறிய சமஸ்தானங்கள் ஒன்றாக இணைப்பது, மாகாணங்களுடன் சேர்ப்பது என்ற தங்களுடைய திட்டத்தின் மூலம் நேரு சர்க்கார் அவர்களுக்குப் புதுப்பட்டயம் எழுதிக்கொடுத்துள்ளார்கள். ஹைதராபாத்தில் நடந்ததுபோன்று, மக்கள் மன்னராட்சிகளை எதிர்த்துக் கலகத்தில் இறங்கிய இடங்களிலெல்லாம், அந்த மன்னர்களுக்கும், நிலப்பிரபுத்வ யதேச்சாதிகாரிகளுக்கும் உதவி செய்ய நேரு சர்க்கார் முன் வந்தது. அண்டையிலுள்ள நேபாள ராஜ்யத்திலே, தலையிட்டது. நேப்பாள மக்களின் பாதுகாவலர்களென்று பாசாங்கு செய்து முன்வந்த துரோகத்தனமான தலைவர்களின் உதவியுடன் ராணாக்களின் உளுத்துப்போன ஆட்சிக்கு முட்டுக் கொடுத்தது. மன்னர்களின் சொத்துக்களையும், உடமைகளையும் அது பறிமுதல் செய்யவில்லை. அதற்கு மாறாக அவைகளைத் தொடர்ந்து அனுபவிக்க விட்டுக் கொடுத்துள்ளது; "ப்ரிவிபர்ஸ்" (மான்யத் தொகை) என்ற பெயரால் இவர்கள் பெறும் கோடிக் கணக்கான ரூபாய்கள் வேறு. தற்கால சமஸ்தானங்களைக் கலைத்து மொழிவாரி மாகாணங்களை அமைக்கவில்லை. மக்களை ஒன்றுபடுத்துவதற்கு பதிலாக தங்களுடைய கொள்கைகளால் தேசிய இனங்களுக்குள்ளே பிணக்குகளைத்தான் அதிகப்படுத்தியுள்ளார்கள்.*

*நம் விவசாயிகளை மகா தரித்திரர்களாக்கியதும், நம் விவசாயத்தைப் பாழ்படுத்தி, நம் உணவுற்பத்தி பயங்கரமான அளவுக்குக் குறைந்து போனதற்குக் காரணமுமான நிலப்பிரபுத்வ சுரண்டல் முறையை நேரு சர்க்கார் நிலைநிறுத்தியுள்ளது; ஜமீன்தாரி ஒழிப்பு என்ற பெயரால், மக்களின் பரம்பரை விரோதிகளும், பிரிட்டிஷ் ஏகாதிபத்யவாதிகளின் நிரந்தர ஏஜண்டுகளுமான நிலப்பிரபுத்வ அட்டைகளுக்கு நஷ்டஈடு என்ற பெயரால் 40 கோடி ரூபாய்கள் வாரியிறைக்க திட்டமிட்டுள்ளார்கள்; அதே சமயத்தில் லட்சக்கணக்கான ஏக்ரா நிலங்களை தனிப்பட்ட சொந்த நிலம் என்ற பெயரால் அந்த ஜமீன்தார்களிடமே விட்டுவைத்துள்ளார்கள். விவசாயிகளுக்கு நிலத்தை வழங்கி அவர்களை நிலப்பிரபுத்வ சுரண்டலிலிருந்தும் லேவாதேவிக்காரர்களின் பிடிப்பிலிருந்தும் அதன்மூலம் நம் விவசாயத்தின் வளர்ச்சியைத் தடைசெய்யும் விலங்குகளைத் தகர்த்தெறிவதற்கு பதிலாக, "உணவுப் பெருக்கு" இயக்கம் என்ற கண்துடைப்பு வேலையில், மக்களிடமிருந்து பிடுங்கிய பணத்தில் 150 கோடி ரூபாயை*

இறைத்திருக்கிறது. அதனால் ஒரு பயனும் விளையவில்லை. அதற்கு மாறாக மந்திரிகளும், அதிகாரவர்க்கக் கும்பல்களும், அவர்களுடன் சம்பந்தப்பட்ட ஒரு சில கம்பெனிகளும் அன்னிய ஏகாதிபத்யவாதிகளுடன் சம்மந்தப்பட்ட ஒரு சில கம்பெனிகளும் கொள்ளை கொள்ளையாக பணம் குவிப்பதில்தான் கொண்டுபோய் விட்டுள்ளது. அன்னிய நாடுகளிலிருந்து, குறிப்பாக அமெரிக்காவிலிருந்து உணவு தான்யங்கள் வாங்குவதில், அனைவரையும் திகைக்க வைக்கும் அளவிற்கு-538 கோடி ரூபாய் செலவழித்துள்ளது. அதுவும், உலகத்திலே மிகவும் ஆக்ரமிப்புத்தன்மை வாய்ந்த ஏகாதிபத்ய வல்லரசுக்கு நம்முடைய அரசுரிமையை அடகு வைக்கும் நிபந்தனைகளுக்குட்பட்டு, இத்தனை கோடி ரூபாய் செலவழித்துள்ளது. விவசாயிகளின் நலவுரிமைகளுக்கும், பொதுமக்களின் நலவுரிமைகளுக்கும் மாறாக நிலப்பிரபுக்களின் நலவுரிமைகளும் அவர்களின் எஜமானர்களாகிய அன்னிய ஏகாதிபத்யவாதிகளின் நலவுரிமைகளுக்கும் சாதகமாகத்தான் இக்காரியங்களை யெல்லாம் நேரு சர்க்கார் செய்துள்ளது.

ஏகாதிபத்ய-நிலப்பிரபுத்வ கொள்ளையின் நேரடியான விளைவுதான் விவசாயிகளின் வறுமை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டு வருவது அதன் காரணமாகத் தங்கள் வாழ்க்கைக்கு மிகவும் அத்யாவசியமான சாதனங்களைக்கூட விவசாயிகளால் வாங்க முடிவதில்லை. நம்முடைய தொழில்களெல்லாம் சீரழிந்து வருகின்றன. நம்முடைய தொழிற்சாலைகளுக்கெல்லாம் அதிபதிகளாயுள்ள பெரிய தொழில் முதலாளிகள், நாட்டிலே பஞ்ச நிலைமையை உண்டாக்கி, சுருங்கிக் கொண்டுவரும் மார்க்கெட்டில் அதிகலாபம் சம்பாதிப்பதற்காக பொருள் உற்பத்தியைக் குறைத்து வருகின்றனர். லட்சக்கணக்கான மக்கள் நிர்வாணமாகப் போய்க் கொண்டிருக்கும்போது, பஞ்சாலை மன்னர்கள் அத்தொழிற்சாலைகள் இன்றைக்கு எவ்வளவு உற்பத்தி செய்ய முடியுமோ—அந்த அளவுக்கும் குறைந்த உற்பத்தியையே செய்கின்றனர். மேலும் 80 கோடி கெஜம் துணியை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கின்றனர். இதர உற்பத்தித் துறைகளில் வேலை செய்யும் பெரிய ஏகபோக முதலாளிகளும் இத்தகைய முறைகளை கையாளுகின்றனர். நம்முடைய பொருள் உற்பத்தி அளவைக் குறைக்கின்றனர்; தேக்கபேற்படுத்துகின்றனர். அதே சமயத்தில், மக்களின் துன்ப துயரங்களைப் பணமாக்கி, தொழிலாளிகளுக்கு ஜீவனச் சம்பளம் கொடுக்க மறுக்கும் ஏகபோக முதலாளிகள் பாங்கிகளில் போட்டிருக்கும் பணத்தின் கணக்கு மாத்திரம் உயர்ந்துகொண்டே போகிறது.

இன்றைய நிலைமை கொள்ளை லாபக்காரர்களுக்கு, ஒரு 'வரப்பிரஸாத' மாயிருக்கிறது. கிடைக்கும் எல்லாப் பொருள்களையும் இருப்பு சேகரித்து முடக்கி, கொள்ளைலாபமடிக்கின்றனர். காங்கிரஸ் மந்திரிமார்கள், அவர்களின் உற்றார்கள், உறவினர்கள், பெரும் பதவிகளில் இருக்கும் அதிகாரிகள்—ஆகிய எல்லோரும் பண வேட்டையில். மேலும் மேலும் அதிக பண வேட்டையில் இறங்குகின்றனர். கொள்ளையில் பங்கு பிரித்துக்கொள்வதில் தங்களுக்குள்ளேயே சண்டை போட்டுக் கொள்ளவும் செய்கின்றனர். பணவீக்கம் என்ற உபாயத்தின் மூலமாக, பணக்காரர்கள் ஏழைமக்களைக் கொள்ளையடித்தும், அம்மக்களின் கடைசி கவளம் உணவையும் பிடுங்கிக் கொள்வதின் மூலம் மேலும் மேலும் பணக்காரர்களாகின்றனர்.

லட்சக்கணக்கான மக்கள் வீடின்றித் தவிக்கும்போது சிற்றரசர்களுடையவும், நிலப் பிரபுக்களுடையவும், பணக்காரர்களுடையவும் விசாலமான மிகப்பெரிய அரண்மனைகளும், மாளிகைகளும் பொதுஜன உபயோகத்திற்கு எடுத்துக்கொள்ளப்படவில்லை; மிக அதிகமான வாடகைகள் மூலமும், வஞ்சத்தின் மூலமும் வீட்டுச் சொந்தக்காரர்கள் மக்களின் ரத்தத்தை உறிஞ்சுவதற்கு அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

லஞ்சமும், ஊழலும் காங்கிரஸ் ஆட்சியின் அடையாள முத்திரையாய் விட்டன. மிகவும் பிரமாதப்படுத்தப்பட்ட காங்கிரஸ் திட்டங்களெல்லாம், அன்னியக் கம்பெனிகளின் நலன்களுக்காகவும் அவர்களின் இந்திய ஏஜெண்டுகளின் நலவுரிமைகளுக்காகவும் சர்க்கார் பட்ஜெட்டில் கொள்ளையடிக்கும் திட்டங்களாய் மாறிவிட்டன. கதர் குல்லாய் என்பது லஞ்சத்திற்கும் கொள்ளை லாபத்திற்கும் மறு பெயராய்விட்டது. பஞ்சாப் மந்திரிசபை டிஸ்மிஸ் செய்யப்படுவதற்குக் காரணமா யிருந்த சம்பவங்கள், மக்களுக்கு ஒழுக்கங்களைப்பற்றி ஞானோபதேசம் செய்பவர்களின் முக (அவ) லட்சணத்தை உலக மக்கள் அனைவருக்கும் வெட்ட வெளிச்சமாகக் காட்டிவிட்டது, அவர்களின் கடந்த 4 வருட ஆட்சியில், பஞ்சாப் காங்கிரஸ் மந்திரிகளும், அவர்களுடைய உறவினர்களும் 5 கோடி ரூபாய்க்குக் குறைவில்லாமல் எப்பம் விட்டிருக்கின்றனர் என்று நம்பப்படுகிறது. வங்காளத்திலும், சென்னை மாகாணத்திலும் காங்கிரஸ்காரர்களுக்கிடையில் நடக்கும் சண்டைகளும், பீஹாரிலும், உத்தர பிரதேசத்திலும் காங்கிரஸ் மந்திரிகள் மானவெட்கமில்லாமல் பணத்தை கையாண்டது. ஆகியவை எல்லாம் அனைவருக்கும் தெரிந்துவிட்டன. பச்

சைப் புளுகுகளின் மூலம் நேரு சர்க்கார் அந்த ஊழல்களை மறைப் பதற்கு எவ்வளவு முயன்றும் முடியவில்லை. ஜீப் கார்கள் வாங்கிய விஷயத்தில் நடந்த படுமோசமான ஊழலின் எதிரொலிகள் இன்னும் தணியவில்லை. அதுவும், வெளிநாடுகளிலுள்ள இந்திய சர்க்காரின் சில ஸ்தானிகராலயங்களின் கள்ள நடவடிக்கைகளும் „சுதந்திர'' சர்க்காரின் சார்பிலே வெளிநாடுகளிலே இந்தியாவிற்குப் பிரதிநிதித்வம் வகிப்போர்களின் நடவடிக்கைகளை அம்பலத்திற்குக் கொண்டுவந்துவிட்டன.

ஆகவே நேருவின் இந்தியாவில் அனைவரும் கஷ்டங்களுக்குள்ளாகியிருக்கின்றனர் என்றோ, சுதந்திரமானது அனைவருக்கும் துன்பதுயரங்களைக் கொண்டுவந்துவிட்டன என்று கூறுவதோ உண்மையல்ல. வருமான வரி புள்ளி விபரங்களை மேலெழுந்தவாரியாகப் பார்த்தாலே, (அப் புள்ளி விபரங்களும் உண்மையானவையல்ல) அவ்வாறு கூறுவது பொய் என்று நிதர்சனமாகும். ஏகாதிபத்யவாதிகள், சுதேச மன்னர்கள், நிலப்பிரபுக்கள், பெரிய ஏகபோக முதலாளிகள், பணத்திமிங்கிலங்கள், வியாபார சூதாடிகள், கள்ள வாணிபம் நடத்துவோர் ஆகியவர்களெல்லாம் சுபீட்சத்தில் தவழ்ந்து வருகின்றனர்; சுதந்திரம் என்றால், இவர்களெல்லாம் மக்களை வஞ்சித்துக் கொள்ளையடிப்பதற்கு சுதந்திரம் கிடைத்துள்ளது; இந்தக் கொள்ளையில் காங்கிரஸ் மந்திரிகள் தாங்களும் சேர்ந்து கொள்வதற்கு சுதந்திரம் கிடைத்துள்ளது என்றுதான் அர்த்தம்.

## குண்டையும்குண்டாந்தடியையும் நம்பி நிற்கும் சர்க்கார்

இந்தக் காலனி அடிமைத்தன, பட்டினி ஆட்சி முறையை, பிரிட்டிஷாரும் அவர்களின் அன்பர்களும் நண்பர்களும் கூட்டாகச் சேர்ந்து நம் மக்களை கொள்ளையடிப்பதை ஆதரித்துத் தாங்கிப் பிடிக்கும் பொருட்டு, பிரிட்டிஷாரின் நேரடி ஆட்சி நாட்களில்கூட இந்தியா கண்டிராத ஒரு மூர்க்கத்தனமான, குரூரமான ஒரு பிற்போக்கு ஆட்சி முறையை நேரு சர்க்கார் இங்கு நிறுவியது; காட்டுத்தனமான பிரிட்டிஷ் சட்டங்களையெல்லாம் மீண்டும் அது உயிர்ப்பித்தது மாத்திரமின்றி, புதிய இன்னும் படுமோசமான அடக்குமுறைச் சட்டங்களை அமுல் நடத்தியது; பத்திரிகை சுதந்திரத்தைப் பறித்தது; மக்களின் உயிரையும், உரிமையையும் போலீஸின் கருணை கடாட்சத்திற்கு விட்டுவிட்டது. தான் நியமித்த சம்பளக் கமிஷனின் சிபார்சுகளை அமுல் நடத்துவதாக வாக்குறுதி கொடுத்த சர்க்கார், தன்னுடைய வாக்குறுதியை

மதித்து நடக்க வேண்டுமெனக் கோரிய ரயில்வேத் தொழிலாளர்களை நசுக்குவதற்கென ஒரு அவசரச்சட்டப் பிரகடனம் செய்தது.

பசித்த மக்கள், அரை நிர்வாண மக்கள் தாங்களும் மனிதர்களாக வாழ வசதிகள் வேண்டுமெனக் கோரி, அவற்றிற்காகப் போராடத் துணிந்தபோதெல்லாம் ஒவ்வொரு நகரிலும், டவுனிலும் கிராமத்திலுங்கூட ரத்த ஆறுகள் பெருக்கெடுத்து ஓடின. காங்கிரஸ் அதிகாரத்திற்கு வருவதை சாத்தியமாக்கிய 1945-46-ம் வருட போராட்டங்களில் முன்னணியில் நின்ற தொழிலாளி வர்க்கம், தொழிலாளர் எதிர்ப்பு சட்டம் எனும் சங்கிலியால் இறுகப் பிணைக்கப்பட்டது. சம்பளத்திற்கான அதன் போராட்டங்கள் ரத்தத்தில் மூழ்கடிக்கப்பட்டன. "பூரண சுதந்திரம்" கிடைப்பதற்கு முன்பே, காங்கிரஸ் மந்திரிகள் அமல்னேர் தொழிலாளர்களின் வீரஞ் செறிந்த தலைவர்களைச் சுட்டு வீழ்த்தினார்கள். தென் இந்திய ரயில்வேத் தொழிலாளர்களின் வேலைநிறுத்தங்களை உடைக்க பயங்கரத்தைக் கட்டவிழ்த்து விட்டார்கள்; ஒவ்வொரு தொழிலாள வர்க்கப் பிரதேசமும் போலீஸ் ஆட்சியின் இரும்புக் காலடியில் நிரந்தரமாக வைக்கப்படும் வரையில் தாக்குதல்கள் தொடர்ந்து நடந்தன. நாளுக்கு நாள் தீவிரமடைந்தும் வந்தன. 1950-ம் வருட மகத்தான பம்பாய் வேலை நிறுத்தத்தில் போலீசுடைய, ஹோம் கார்டுகளுடைய குண்டுகளுக்கு பதின்மூன்று தொழிலாளர்கள் பலியானார்கள். சரசமான விலையில் அரிசி கேட்ட, கூச்பீஹாடு மக்களின் பட்டினி ஊர்வலத்தை கொலைகாரத்தனமான குண்டு மழை வரவேற்றது. அங்கு சுட்ட துப்பாக்கி குண்டோசை நாடெங்கும் எதிரொலித்தது. மேற்கு வங்கத்தை ஆளுகை ஊழல் மந்திரி சபை, தான் அதிகாரத்தில் நீடித்து இருப்பதற்காக, வீரஞ்செறிந்த கல்கத்தா வாலிபர்களை, நூற்றுக்கணக்கான போராட்டங்களின் முன்னணிப்பதாகை வீரர்களை, அனேக தடவைகள் நேருவின் ஆசீர்வாதத்துடன் சுட்டு வீழ்த்தியது. 1949-ல் ஒரே நாளில் கல்கத்தாவில் போலீசால் நான்கு மாதர்கள் சுட்டுக் கொல்லப்பட்டனர். பள்ளிச் சம்பள உயர்வை எதிர்த்துக் கிளர்ச்சி செய்த ஒரே குற்றத்திற்காக கட்டாக் மாணவர்கள் ஆயுதப் போலீசால் அடித்து நொறுக்கப்பட்டனர்.

காங்கிரஸ் தலைவர்கள் நைஜாமுடன் ஒரு வருட காலத்திற்கு ஒப்பந்தம் செய்துகொண்டபோது, அவனுக்கு ஆயுதங்கள் கொடுத்துதவிக்கொண்டிருந்த பொழுது, காட்டுமிராண்டி, ரஜாக்கர் கொள்ளையர்களை எதிர்த்துப் போரிட்ட தெலுங்கானா விவசாய மக்களுக்கு கிடைத்த பரிசு என்ன? திரள் திரளாக அவர்கள்

கொலை செய்யப்பட்டார்கள்; தூக்கு மேடைக்கு அனுப்பப்பட்டார்கள்; அவர்களின் தாய்மார்களும்: சகோதரிகளும் மானபங்கம் செய்யப்பட்டார்கள்; மக்களுக்கு உதவி செய்ய என்ற சால்ஜாப்பு கூறி ஹைதராபாத்திற்குள் நுழைந்த நேரு சேனையின் ஒத்துழைப்புடன் பரம வெறுப்பிற்குள்ளான நிலப்பிரபுக்களின் பழைய ஆட்சி மீண்டும் விவசாயிகள் மீது திணிக்கப்பட்டது. ஆந்திரா, மலபார், பாடியாலா, பாலியா, திரிபுரா, மணிப்பூர், காகத்வீபம் முதலிய ஒவ்வொரு பிரதேசத்திலும் நேரு சர்க்கார் நிலப்பிரபுக்களுக்குச் சாதகமாக ஓடிவந்தது; விவசாயிகளின் போராட்டங்களை நசுக்கியது. நூற்றுக் கணக்கான தொழிலாளர்கள், விவசாயிகள் மாணவர்கள், ஆசிரியர்கள், ஆபீஸ் குமஸ்தாக்கள், ஆண்கள், பெண்கள் குழந்தைகளுங்கூட இன்றைய சர்க்காரின் போலீஸ், ராணுவ, ஹோம்கார்டுகளின் கைகளில் கொலையுண்டு வீழ்ந்தவர்கள் காங்கிரஸ் நிறுவிய அஹிம்சா ஆட்சியின் அடையாள சின்னங்களாக, தத்தம் சரீரங்களில் குண்டுகளையும், குண்டாந்தடி தழும்புகளையும் பல்லாயிரக்கணக்கான பேர்கள் தாங்கித் திரிகிறார்கள்.

தன்னுடைய மூன்று வருடகால ஆட்சியில், தன் அரசியல் எதிரிகளில் 50,000 பேரை சிறைக்குள் தள்ளியிருப்பதாகவும், 13,000 பேர்களை சுட்டுத்தள்ளியோ, காயப்படுத்தியோ இருப்பதாகவும் சர்க்காரே ஒப்புக்கொண்டுள்ளது. யதார்த்த சம்பவத்தில் ஒரு மிகச் சிறிய பாகத்தைத்தான் இந்த எண்கள் வெளியிடுகின்றன என்பதை எல்லோரும் அறிவார்கள். அரசியல் கைதிகள் மீது தொடர்ந்து மீண்டும் மீண்டும் தொடுக்கப்பட்ட தாக்குதல்கள் மேற்கு வங்க, சேலம் சிறைகளில் மிக பயங்கரமான படுகொலைகளில் சென்று முடிந்தன. ஏறக்குறைய முப்பது கைதிகள் இங்கு சுட்டு வீழ்த்தப்பட்டார்கள். தன்னை எதிர்த்துப் போராடுபவர்களை நசுக்க சர்க்கார் எவ்வளவு தூரம் சென்றுவிட்டது என்பதற்கோர் எடுத்துக்காட்டு இது.

எனவே, மக்களின் தேவைகள் சம்பந்தமான பிரச்னைகளுக்குப் பணப்பெட்டி காலி என சர்க்கார் கூறிவரும் இதே சமயத்தில், வருடாவருடம் போலீஸ், ராணுவ பட்ஜெட்டுகள் உயர்ந்து கொண்டே போனதில் ஆச்சரிய மேதுமில்லை. மத்திய சர்க்கார் பட்ஜெட்டில் 90 சத விகிதம் ராணுவத்திற்கும், அதிகார வர்க்கத்திற்கும் செலவழிக்கப்படுகிறது. மக்களில் 90 சதவிகிதம் கல்வி வாசனையற்றிருக்கும் ஒரு நாட்டில், மாகாண சர்க்கார்கள் கல்விக்காக செலவழிப்பதைவிட பல மடங்கு அதிகமாக போலீசுக்காக செலவழிக்கிறது.

## சர்க்காரின் அயல்நாட்டுக் கொள்கை— சமாதானக் கொள்கை அல்ல

ஏகாதிபத்தியவாதிகளுடன் பிணைக்கப்பட்ட ஒரு சர்க்கார், உள் நாட்டில் பிற்போக்கு ஆட்சியை நிறுவியுள்ள ஒரு சர்க்கார் ஒரு சுதந்திரமான, முற்போக்கான அயல்நாட்டுக் கொள்கையை, உண்மையான சமாதானக் கொள்கையைக் கடைப்பிடிக்கமுடியாது.

சண்டையா? சமாதானமா? என்ற பிரச்னைதான் இன்று உலக முழுவதையும் ஆட்டிவருகிறது. ஒவ்வொரு நாட்டிற்கும், ஒவ்வொரு மக்களுக்கும் முன்னுள்ள மிக முக்கிய பிரச்னை இதுதான்.

ஆக்கிரமிப்பு வெறிகொண்ட அமெரிக்க ஏகாதிபத்யவாதிகளும், அவர்களின் நேசர்களும், பொம்மைகளும், பிரிட்டிஷ், பிரெஞ்சு இன்னும் இதர ஏகாதிபத்தியவாதிகளும் எல்லா நாடுகளின் சுயேச்சையையும், சுதந்திரத்தையும் அழித்து, அவைகளை அடிமைப்படுத்துவதற்காக உலகம் அனைத்தையும் யுத்தப் படுகுழியில் அமிழ்த்துவிட திட்டமிட்டுவருகிறார்கள். உலகில் எந்தப் பகுதியிலும் அவர்களுக்குக் கிடைக்கும் ஒவ்வொரு வெற்றியும் எல்லா நாடுகளின் சுயேச்சைக்கும், சுதந்திரத்திற்கும் ஏற்படும் ஆபத்து; உலக சமாதானத்திற்கேற்படும் ஆபத்தாகும்.

நம் மக்கள் சுயேச்சையாகவும் சுதந்திரமாகவும் இருக்க விரும்புகிறார்கள். எல்லா நாடுகளும் சுயேச்சையாகவும், சுதந்திரமாகவும் இருக்கும் பொருட்டு, எல்லா நாடுகளிலிருந்தும் அன்னியத் துருப்புகளை வாபஸ் வாங்க வேண்டுமென அவர்கள் விரும்புகிறார்கள். பல வருடங்களாகப் பீடித்திருந்த அடிமைத் தனத்திலிருந்தும், அவமதிப்பிலிருந்தும் தன்னை விடுவித்துக்கொண்டு, தன்னுடைய மக்களுக்கு புதுவாழ்வை அமைத்துக் கொண்டிருக்கும் நம் அண்டைப் பெரு நாடு சீனாவுடன் மிக நெருங்கிய நட்புறவையும், சகோதர சம்பந்தங்களையும் ஏற்படுத்திக்கொள்ள அவர்கள் விரும்புகிறார்கள். அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் படை பலத்தைத் திரணமெனக் கருதி, ஆட்களும் ஆயுதமும் மிக அதிகங்கொண்ட எதிரிகளை எதிர்த்து தங்கள் நாட்டைக் காக்கப் போராடி வரும் கொரிய மக்களின் வீர சாகசப் போராட்டங்கள் அவர்களை மயிர்க்கூச்செறியச் செய்துள்ளன. பல நூற்றாண்டுகளாக நம்மை அடிமைகளாய் ஆண்ட பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளை அவர்கள் வெறுக்கிறார்கள்; இதே விரோதியை எதிர்த்துப் போராடும் மலேய மக்களிடம் அவர்கள் அனுதாபங் காட்டுகிறார்கள்.

எல்லாவித சுரண்டல்களிலிருந்தும் தங்களை விடுவித்துக் கொண்டு, உலக மக்கள் அனைவருக்கும் கடைத்தேற வழிகாண

பித்து நிற்கும் தொழிலாளர்கள் விவசாயிகள் வாழும் சோவியத் யூனியனை நம் மக்கள் நேசிக்கிறார்கள், கௌரவிக்கிறார்கள். ஒவ்வொரு பிரச்னையிலும், தங்கள் விடுதலைக்காகப் போராடிக் கொண்டிருக்கும் காலனி மக்களின் கோரிக்கைகளை சோவியத் யூனியன் ஆதரித்துத் தாங்கிப் பேசியுள்ளதை அவர்கள் நன்கு அறிவார்கள்.

பாகிஸ்தான் மக்களுடன் நம் மக்கள் நேசப் பான்மையுடன் வாழ விரும்புகிறார்கள். ஐ. நா. சபையில் ஆதிக்கம் வகிக்கும் ஏகாதிபத்திய வல்லரசுகளின் தலையீடின்றியே தங்கள் எதிர்காலத்தை தாங்களே நிர்ணயித்துக்கொள்ள காஷ்மீர் மக்களுக்கு சாத்தியமாக்கும் வகையில் சமாதான ஜனநாயக முறைகளின் மூலம் காஷ்மீர் பிரச்னையைத் தீர்த்துவைக்க அவர்கள் விரும்புகிறார்கள்.

எல்லாவற்றிற்கும் மேலாக, நம் மக்கள் சமாதானத்தை நேசிக்கிறார்கள்; யுத்தத்தை வெறுக்கிறார்கள். மனிதன் உண்டாக்கிய வங்கப் பஞ்சத்தில் முப்பத்தைந்து லட்சம் பேர்கள் மாண்டுமடிந்த பயங்கரத்தை அவர்கள் மறந்துவிடவில்லை. ஏற்கனவே அவல நிலையில் உள்ள மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேலும் படுகேவலமாக்க, கொரிய யுத்தத்தைப் பயன்படுத்திக் கொண்டு இந்தியாவில் பெரு முதலாளிகள் எப்படி விலைகள் உயர்த்தினார்கள் என்பதையும் அவர்கள் பார்த்திருக்கிறார்கள். எவ்விதம் தங்கள்மீது ஒவ்வொரு யுத்தமும் புதிய பாரங்களை சுமத்துகிறது என்பதையும், எவ்விதம் தங்கள் எதிரிகளின் பணப்பெட்டி நிறைகிறது என்பதையும் அவர்கள் கண்டிருக்கிறார்கள்.

நம்மக்களின் இந்த அபிலாஷைகளுக்கு அனுசரணையான ஒரு கொள்கையைத்தான் நேரு சர்க்கார் கடைப்பிடித்து வந்துள்ளது என எவராகிலும் கூறமுடியுமா? ஒருவரும் முடியாது.

கொரியாவில் அமெரிக்க ஆக்கிரமிப்பிற்கு அனுமதி கொடுக்கும் தீர்மானம் உள்பட அனேக பிரச்னைகளில் ஐக்கிய நாடுகள் சபையில் அது ஆங்கிலோ—அமெரிக்க ஏகாதிபத்யவாதிகளுடனே ஒத்துழைத்து நின்றது. கொரிய மக்களின் கொலையாளிகளுக்கு ஒரு வைத்திய உதவிப் படையை அனுப்புவதின் மூலம் அது தன் "மனிதாபிமானத்தை" வெளிப்படுத்தியது. கொரிய நகரங்கள் மீதும், கிராமங்கள்மீதும் கண்மூடித்தனமாக குண்டு வீசியதை அது கண்டிக்கவில்லை. வியட்நாம் மக்களுக்கு எதிராக போர் நடத்துவதற்கு பிரஞ்சு ஏகாதிபத்யவாதிகளுக்கு போக்குவரவு வசதிகளை அது செய்து கொடுத்திருக்கிறது. கூர்க்காத் துருப்புகளைப் படை திரட்ட பிரிட்டிஷ் ஏகாதிபத்யவாதிகளை அனுமதிப்பதின் மூலம், மலேயாவில் அவர்களுக்கு நேரடியாக சகாயம் செய்து வருகிறது. பர்மிய மக்களுக்கு எதிராக, தக்கின் நூ சர்க்காருக்கு ஆயுத

உதவியை அது அளித்திருக்கிறது. அமெரிக்கா ஆட்சேபிக்கிறது என்ற காரணத்தினால், சீனுவுடன் நடத்தும் வியாபாரத்தை அது குறைத்துக்கொண்டது. குறிப்பிட்ட சரக்குகளை சீனுவுக்கு ஏற்று மதி செய்யக்கூடாதென தடை விதித்துள்ளது. தங்கள் மீது சார்ந்தே நம் நாடு இருக்க வேண்டுமென விரும்பும் ஏகாதிபத்ய வாதிகளுடன் வர்த்தக உறவுகள் கொள்ளுவதையே விசேஷமாகக் கருதுகிறதே தவிர, சோவியத் யூனியன், மக்கள் ஜனயநாயகங்கள் போன்ற ஜனநாயக நாடுகளுடன் பரந்த அளவில் வியாபாரத்தைப் பெருக்கவில்லை. நேரு சர்க்காரின் "நடு நிலைமை"யான, "சுதந் திரமான" அயல்நாட்டுக் கொள்கையின் நிஜசொரூபம், அமெரிக்கா வுடன் செய்துகொண்ட கோதுமை ஒப்பந்தினால் அம்பலமாகிறது.

உலகம் பூராவையும் உடனடியாக யுத்தப் படுகுழியில் ஆழ்த் தக்கூடிய ஏகாதிபத்யவாதிகளின் நடவடிக்கைகளை மக்களின் நிர்ப் பந்தத்தினாலும், தன்னுடைய சொந்த பலவீனத்தின் காரணமாகவும் சில சமயங்களில் நேரு சர்க்கார் எதிர்த்திருக்கிறது. ஆனால் அதன் அடிப்படையான கொள்கை பிரிட்டிஷ் ஏகாதிபத்யவாதிகளிடம் கட்டுண்டு கிடப்பதாகவும், சண்டைக்கும், சமாதானத்திற்கு மிடையே விளையாடுவதாகவும் இருக்கிறது.

நேரு சர்க்கார் காஷ்மீரப் பிரச்னையை ஐ. நா. சபைக்குக் கொண்டு சென்றது. இந்தியாவிற்கும், பாகிஸ்தானுக்குமிடையே மிக அபாயகரமான ஒரு நெருக்கடி நிலைமையை சிருஷ்டித்துள்ள

மிக அபாயகரமான ஒரு நெருக்கடி நிலைமையை சிருஷ்டித்துள்ள

ஏகாதிபத்யவாதிகளின் தந்திர சதி வேலைகளுக்குப் பாதை செப்ப னிட்டுக் கொடுத்தது. காஷ்மீர்ப் பிரச்னையில் மத்தியஸ்தம் செய் யும் பிரரேபணையை ஐ. நா. சபையில் நேரு நிராகரித்தார். ஆனால், "எல்லைத் தகராறு"களைக் தூண்டிவிட்டு ஏகாதிபத்ய நாடகமாடும் கிரஹாமை வரவேற்க முனைந்து நின்றார். பாகிஸ்தானில் அதிகார பீடத்திலமர்ந்துகொண்டு, பாகிஸ்தான் மக்களின் ஒப்பற்ற புதல் வர்களைக் கொலை செய்யும் எண்ணமுடன், சதிவழக்குப் பித்த லாட்டங்களைச் சிருஷ்டித்து வரும் பிற்போக்கு வகுப்பு வாதிகள், பாகிஸ்தானுடைய சுதந்திரத்தையும், சுயாதிபத்தியத்தையும் பாதுகாப்பதாக பாவனை செய்து, இந்த நிலைமையை உபயோகப் படுத்திக் கொண்டார்கள். பாகிஸ்தானி மக்களை வழி தவறி நடத் திச் சென்றார்கள்.

காஷ்மீர் மகாராஜாவை ஆட்சியிலிருந்து நீக்கி, விவசாயிகளு க்கு நிலமளிக்கும் உண்மையான விவசாய சீர்திருத்தத்தை அமுல் நடத்துவதற்குப் பதிலாக, ஐ. நா. மத்தியஸ்தரை வெளியேற்றி, ஐ.நா. சபையிலிருந்து காஷ்மீர் பிரச்னையை வாபஸ் பெற்று, தங்

கள் எதிர்காலத்தைத் தாங்களே ஒன்று சேர்ந்து சுயேச்சையாக, நிர்ணயித்துக்கொள்ள காஷ்மீர் மக்கள் அனைவருக்கும் சாத்தியமாக்கும் பொருட்டு, காஷ்மீரம் ராணுவரீதியில் இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளதற்கு இறுதி கட்டும் முறையில் உருவான பிரேரணைகளை முன் வைப்பதற்குப் பதிலாக சோவியத் யூனியனுககும், சீனாவிற்கும் எதிரான ஒரு யுத்தத்தில் காஷ்மீரத்தை ஒரு யுத்த தளமாக உபயோகப் படுத்திக் கொள்ளவும், இந்தியா, பாகிஸ்தான் இரு நாடுகளும் பலவீனமடைய அவைகள் இரண்டும் ஒன்றுடன் ஒன்று சிண்டுபிடித்து நிற்பதையே விரும்பும் ஏகாதிபத்தியவாதிகளிடமிருந்து உதவிகளை எதிர்நோக்கும் ஒரு கொள்கையை நேரு சர்க்கார் கடைப்பிடித்துவருகிறது.

இவ்வாறாக, உள்நாட்டுக் கொள்கையிலும் சரி, அயல்நாட்டுக் கொள்கையிலும் சரி, நேரு அரசாங்கம் இந்திய மக்களுடைய எதிரிகளின் அரசாங்கமென நிரூபித்துக் காட்டிவிட்டது.

எலும்புத் துண்டுக்காக தம் தாய் நாட்டை அன்னிய ஏகாதிபத்தியவாதிகளுக்குக் காட்டிக்கொடுத்த இந்திய முதலாளிகளில் மிகவும் பிற்போக்குப் பகுதியினரின், மன்னர்களின், நிலப்பிரபுக்களின் அரசாங்கமெனத் தன்னைத்தானே அது அம்பலமாக்கிக் கொண்டது.

எனவே, இந்த சர்க்கார் போக வேண்டும். அதிகாரபீடத்தில் அமரும் உரிமைகளனைத்தையும் அதுஇழந்துவிட்டது. இதனுடைய அதிகாரத்தை அழித்தொழிக்கக்கூடிய, இது அமுல் நடத்திவந்த அரசாங்க முறையையே சின்னாபின்னமாக்க, தங்கள் கைகளிலேயே அதிகாரங்களனைத்தையும் எடுத்துக்கொள்வதற்காக, மக்கள் ஒரு வெகுஜன இயக்கத்தை வளர்க்க வேண்டும். இன்றைய சர்க்காருக்குப் பதிலாக அவர்கள் ஒரு மக்கள் ஜனநாயக சர்க்காரை நிறுவ வேண்டியிருக்கிறது.

காங்கிரஸ் தலைவர்களின் வாக்குறுதிகளாலும், அறிக்கைகளாலும் புனர்நிர்மாண திட்டங்களாலும் மீண்டுமொருமுறை ஏமாந்து விடாதீர்கள் என பொதுமக்களைக் கம்யூனிஸ்ட் கட்சி எச்சரிக்கிறது. கடந்த நான்கு வருடங்களில் கொடுத்த ஒவ்வொரு வாக்குறுதியையும் காற்றில் பறக்கவிட்ட அவர்கள், மறுபடியும் அதே கைங்கர்யத்தைத்தான் செய்வார்கள்.

## மக்கள் ஜனநாயக அரசாங்கம் என்ன செய்யும்?

எல்லா ஜனநாயகக் கட்சிகள், குரூப்கள், தனி நபர்களை உள்ளடக்கிய ஒரு சர்க்காராக, தொழிலாளர்களையும் ...

யும், மத்தியதர வர்க்கங்களையும், இந்தியா சுயேச்சையும், சுதந்திரமும் அடைவதற்காகவும், நம் நாடு உண்மையாகவே தொழில் மயமாவதற்காகவும் பாடுபடும். தேசீய பூர்ஷ்வாக்களையும் பிரதிநிதித்துவப் படுத்தும் ஒரு சர்க்காராக மக்கள் ஜனநாயக அரசாங்கம் விளங்கும்.

இத்தகைய சர்க்கார் எத்தகைய கடமைகளை நிறைவேற்றும் என்பதை விளக்கி ஏற்கனவேயே தன்னுடைய நகல் வேலைத் திட்டத்தில் கம்யூனிஸ்டுக் கட்சி கூறியுள்ளது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துடன் உள்ள தொடர்புகளை அது துண்டிக்கும்; நம் ஆயுதப் படைகளிலிருக்கும் பிரிட்டிஷ் ஆபீஸர்களை வெளியேற்றும்; இந்தியாவிலுள்ள எல்லா பிரிட்டிஷ் மூலதனத்தையும் பறிமுதல் செய்து, தேசீய மயமாக்கும். ஏகாதிபத்தியவாதிகளுடனும், நிலப்பிரபுக்களுடனும் சேர்ந்துகொண்டு மக்களை எதிர்க்கும் நபர்களின் விரோதச் செயல்களை நசுக்க மிகவும் தீவிரமான நடவடிக்கைகளை அது எடுக்கும். எல்லா விவசாயக் கடன்களையும் ரத்து செய்யும்; நிலப்பிரபுக்களிடமிருந்தும், மன்னர்களிடமிருந்தும் எல்லா நிலங்களையும் உற்பத்தி சாதனங்களையும் அவர்களுக்கு எவ்வித நஷ்டஈடும் கொடுக்காமல் எடுத்துக்கொண்டு, உழுபவனுக்கே அந்த நிலத்தை சொந்தமாக்கும்; சிறிய நிலச் சுவான்தார்களுக்கு, அவர்களுக்கு வாழ்க்கைக்குப் போதிய வசதிகள் செய்துகொடுக்கவும், பணக்கார விவசாயிகளின் நலன்கள் பாதிக்காமலும் இருக்க தகுந்த பாதுகாப்புகளைச் செய்யும். நிலம் கிடைப்பது போக, மேலும் விவசாயத் தொழிலாளர்களுக்குப் போதிய சம்பளமும் கிடைக்க உத்திரவாதமளிக்கும். நிலப்பிரபுத்வ சுரண்டலிலிருந்து விடுவிக்கப்பட்டு, நிலம் சொந்தமாகப் பெற்ற விவசாயி, சீனாவில் இன்று செய்வதைப்போலவே, இங்கும் உணவுப் பொருள்கள், மூலப் பொருள்கள் உற்பத்தியைப் பெருக்க முடியும்; அணைகள் கட்டி நீர்ப்பாசன வேலைகளைச் செய்யமுடியும்; வெள்ள அபாயங்களை அடியோடு நீக்கவும், நாடு நகரங்களிலுள்ள மக்களைப் போஷிக்கவும், நாட்டின் இயற்கை அமைப்பையே மாற்றித் திருத்தவும் தன்னுடைய பிரம்மாண்டமான உழைப்பு சக்தியை உபயோகப்படுத்தவும் முடியும்.

மக்கள் ஜனநாயக சர்க்கார் இந்தியாவின் தொழிலை வளர்க்கும். இதன் பொருட்டு தேசீய மயமாக்கப்பட்ட மூலதனத்தை பிரயோகித்துக் கொள்ளும்; தனிப்பட்ட முதலாளிகளுடனும் ஒத்துழைக்கும், இவர்களுக்கு சட்டப்படி கிடைக்கவேண்டிய லாபங்களும் இவர்களுடைய நல உரிமைகளும் சர்க்காரால் உத்திரவாதம்

செய்து கொடுக்கப்படும். உறுதியாக நின்று ராணுவ செலவையும் போலீஸ் இலாகா செலவையும் குறைப்பதின் மூலமும், பயன் தரத் தக்க முறையில் விலை வாசிகளைக் கட்டுப்படுத்துவதின் மூலமும், நாணய சீர்திருத்தம் செய்வதின் மூலமும் இந்த சர்க்கார் பணப் பெருக்கத்தைத் தடுத்தொழிக்கும். கைத் தொழிலாளர்களுக்கும், சிறு உற்பத்தியாளர்களுக்கும் கடன் தொகையையும் உற்பத்தி சாதனங்களும் மூலப் பொருள்களும் கொடுத்துதவும், நம்முடைய தேச நல உரிமைகளுக்கு ஏற்ற நிபந்தனைகளுக்குட்பட்டு நமக்கு மூலதனமளிக்கத் தயாராயுள்ள அன்னிய சர்க்கார்களிடமிருந்தும் தனிப்பட்ட முதலாளிகளிடமிருந்தும் கிடைக்கும் உதவியை இந்த சர்க்கார் வரவேற்கும். இது தொழிலாளர்களுக்கு வாழ்க்கைக்குப் போதிய கூலி கிடைக்கும்படி செய்யும். அவர்களுடைய தொழிற் சங்கங்களுக்கும் கூட்டு ஒப்பந்தங்கள் செய்துகொள்ள தொழிலாளர் களுக்குள்ள உரிமையையும், அங்கீகாரம் செய்யும். சர்க்கார், முதலாளிகள் ஆகியோரின் செலவில் வேலை செய்யும் சக்தி யிழந்தோருக்கும், நோய்வாய்ப்பட்டோருக்கும் வேலை கிடைக்காதவர்களுக்கும் உதவிசெய்ய சமூக இன்ஷியூரன்ஸ் முறையை நிறுவும். எல்லா ஆபீஸ் சிப்பந்திகளுக்கும் அவர்கள் சர்க்கார் ஆபீஸில் வேலை செய்பவர்களாயிருந்தாலும் சரி, தனிப்பட்ட நபர்களிடம் வேலை செய்தாலும் சரி - எவ்வித வித்யாசமுமின்றி சரிநிகர் சமானமான நிலை ஏற்படுத்தப்படும். லாபங்கள் கட்டுப்பாடு செய்யப்படும். கூட்டு உற்பத்தி குழுக்கள் நிறுவப்படும்.

மக்களுடன் நெருங்கிய தொடர்புடைய ஒரு தேசிய ராணுவத்தை மக்கள் ஜனநாயக சர்க்கார் சிருஷ்டிக்கும். இன்றுள்ள ராணுவத்தைச் சேர்ந்த சாதாரண சிப்பாய்கள் ஈவிரக்கமற்ற மிகக் கொடிய கட்டுப்பாட்டிற்கு கீழ்ப்பட்டு அவதியுறுகின்றனர். மிகச் சொற்ப சம்பளமும் மோசமான உணவும்தான் அவர்களுக்குக் கிடைத்து வருகிறது. இந்த சொற்ப உணவும் வாழ்க்கை வசதிகளும்கூட ஊழல்மிகுந்த ராணுவ அமைப்பின் விளைவாய் பறிக்கப் பட்டுவிடுகின்றன. இந்த சாதாரண சிப்பாய்களுக்கு மக்கள் ஜனநாயக சர்க்கார் மனித நாகரீகத்திற்குகந்த வாழ்க்கை நிலைமைகளை ஏற்படுத்தும். இவர்களுக்கு பூரணமாய் பிரஜா உரிமைகளும் அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபடும் உரிமையும் வழங்கப்படும்.

இன்றுள்ள போலீசை மக்கள் ஜனநாயக சர்க்கார் அகற்றிவிடும். மக்களை அடக்கி ஒடுக்குவதில் சூரர்களென்று பெயர்பெற்ற போலீஸ்காரர்களை நீக்கிவிடும். போலீசுக்குப் பதில் வெகுஜன ஆதரவுடன் விளங்கும் பாதுகாப்பு படையை நிறுவும். இந்த சர்க்கார் பிரஜா உரிமைகளைப் பூரணமாய் வழங்கும். பேச்சு சுதந்திர

மும், பத்திரிகை சுதந்திரமும், கூட்டம் கூடுதல், வேலை நிறுத்தம் செய்தல், சங்கம் அமைத்தல் முதலிய சுதந்திரங்களும் நிலவுமோர் ஆட்சி ஏற்படும்.

தேசிய இனமென்னும் அடிப்படையில் மாகாணங்கள் வகுக்கப்படும். சமஸ்தானங்கள் ஒழிக்கப்படும். இன்றுள்ள மாகாணங்கள் திருத்தி அமைக்கப்படும். அவற்றிற்கு சுயநிர்ணய உரிமை உள்பட விரிவான பல உரிமைகளும் வழங்கப்படும். தனிப்பட்ட தேசிய இனங்கள், மலைஜாதிகள் ஆகியவற்றின் இஷ்ட பூர்வமான உடன்பாட்டின் அடிப்படையில் ஒரு ஐக்கிய இந்தியா சிருஷ்டிக்கப்படும். எங்கெங்கு முடியுமோ அங்கெல்லாம் தேசிய சிறுபான்மையோருக்கும் மலைஜாதியினருக்கும் ஸ்தல சுயஆட்சி வழங்கப்படும். எல்லா சிறுபான்மை வகுப்புகளின் நல உரிமைகளையும் மக்கள் ஜனநாயக சர்க்கார் பாதுகாத்துநிற்கும். வகுப்புவாதத்தையும் மத வெறியையும் தூண்டுவோரெல்லோரையும் அது குற்றம்சாட்டி தண்டனை விதிக்கும். ஒடுக்கப்பட்ட, பின்தங்கியுள்ள மக்கள் பகுதியினர் மிக துரிதமாக முன்னேறி வளர்ச்சிபெற உதவிசெய்யும்.

மக்கள் ஜனநாயக சர்க்கார் ஜாதி ஒடுக்குமுறையை ஒழித்துக்கட்டும் : தீண்டப்படாதவர்கள் எனக்கூறி ஒரு பகுதி மக்களை கொடுமைப்படுத்துவோரையும், ஜாதியின்பேரால் உயர்வுதாழ்வு பாகுபாடு செய்யும் இதர நடவடிக்கைகளையும் தண்டனைக்குள்ளாக்கும். சமூக, பொருளாதாரத் துறைகளில் பெண்களுக்கு சம உரிமை வழங்காத எல்லா சட்டங்களையும் நிர்மூலமாக்கும், அவர்கள் பூரண சுதந்திரமும், சமத்துவமும் பெற அவர்களுக்கு உதவிபுரியும். ஆண்களைப் போன்றே செய்யும் சம அளவு வேலைக்கு சம அளவு சம்பளம் பெண்களும் பெறுவார்கள். முழுச் சம்பளத்துடன் அவர்களுக்கு பிரசவ விடுமுறை அளிக்கப்படும். மாதர்களின் உடல் நலனைச் சரிவரப் பாதுகாக்க விசேஷ நடவடிக்கைகள் எடுக்கப்படும். கட்டாய, இலவச ஆரம்ப கல்வியை அது அமலுக்குக்கொண்டுவரும். உயர்தரப்படிப்பும், கலாசாலைக் கல்வியும் கற்றுக்கொள்வதை பரந்த அளவில் அபிவிருத்திசெய்ய அது தக்க நடவடிக்கைகள் எடுக்கும். மக்களின் கலாச்சார மட்டத்தை உயர்த்துவதற்கான நடவடிக்கைகளை எடுக்கும். நோய்நொடியை எதிர்த்து போராடுவதற்காக நாடு முழுவதும் சுகாதார நிலையங்களையும், வைத்திய விடுதிகளையும் தோற்றுவிக்கும்.

அகதிகளுக்கு தொழிலும் நிலமும், உற்பத்தி சாதனங்களும் கொடுத்து, தங்கள் தேசீய பரம்பரைகளுக்கு ஒத்தபடி தங்களுடைய வாழ்க்கையைத் தாங்களே கட்டிக்கொள்ள அவர்களுக்கு ஒரு சந்தர்ப்பமளிக்கும்-

பரிபூரண சமத்துவம், பரஸ்பர சகாயம் என்ற அடிப்படையில், எல்லா நாடுகளுடனும் வியாபார, பொருளாதார உறவுகளை மக்கள் ஜனநாயக அரசாங்கம் ஏற்படுத்திக்கொள்ளும். உலக வல்லரசுக ளிடையே ஒரு சமாதான ஒப்பந்தம் ஏற்படுதற்காகவும் அணுகுண் டிற்குத் தடைவிதிப்பதற்காகவும், எல்லா நாடுகளிலிருந்தும் அன் னியத் துருப்புக்களை வாபஸ் வாங்குவதற்காகவும், சுயேச்சையாக வும் இருப்பதற்கான உரிமைக்காகவும் அது பாடுபடும். பாகிஸ் தான், சிலோன், நேபாளம் முதலிய நாடுகளுடனும் அது ஒரு நேச உடன்படிக்கையை செய்துகொள்ளும். மக்களின் சக்திமீது ஆதாரப்பட்டு, மக்களின் நலன்களால் வழி காட்டப்பட்டு, மக்கள் ஜனநாயக அரசாங்கம் நம் நாட்டை எதிர்நோக்கியுள்ள எல்லாப் பிரச்னைகளையும் தீர்க்கும். மனிதனை மனிதன் சுரண்டுதலற்ற ஒரு சோஷலிஸ சமூகத்திற்குப் பாதை வகுக்கும் ஒரு சுதந்திர ஜன நாயக, சுபீட்சம் பொங்கும் இன்பமயமான ஒரு நாடாக இந்தி யாவை மாற்றுவதற்காக, அது புத்துயிர் பெற்றெழுவதற்காக, நம் நாட்டின் ஒப்பற்ற இயற்கை வளங்களையும், எண்ணற்ற மனித பலத்தையும் அது உபபோகப்படுத்தும்.

## மக்கள் ஜனநாயக அரசாங்கம்— மக்கள் அதிகாரத்தின் ஸ்தாபனம்

மக்களின் ஜனநாயக அரசாங்கம் இவைகளெல்லாவற்றையும் செய்யும் என்பதற்கு என்ன உத்திரவாதமிருக்கிறது என்று பலர் கேட்கலாம். தேசீய காங்கிரஸ் கட்சியானது மக்களுக்கு அநேக வாக்குறுதிகளைக் கொடுத்துவிட்டு, பிறகு அவைகளையெல்லாம் காற்றிலே பறக்கவிட்டு விடவில்லையா? அத்தகைய கேள்விகளை ஜனங்கள் கேட்பது மிகவும் சரிதான். மக்கள் ஜனநாயக அரசாங்க மானது, எல்லாவற்றிற்கும் மேலாக, பாமர மக்களின் அரசாங்க மாக இருக்கும்; கைவிரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சில பணக் காரர்களின் அரசாங்கமாக இருக்காது என்ற விஷயத்திலேயே மேற் சொன்ன கேள்வியின் பதில் அடங்கியுள்ளது. ஆகவே, அரசாங்கத்தின் அமைப்பே, அரசாங்கத்தை மக்களே பயனுள்ள முறையில் நிர்வாகம் செய்யக்கூடிய முறையில் இருக்கும். இன் றுள்ள ஆட்சிக்கெதிராகவும், அதனுடைய அழிவை ஏற்படுத்து வதற்காகவும் நடக்கும் போராட்டத்தில் தலைமை வகிக்கும் ஒன்று பட்ட மக்களின் போராட்ட ஸ்தாபனங்கள் புதிய அரசாங்க அதி காரத்தின் அடிப்படையாக அமையும். பிரிட்டிஷ்காரர்கள் செய்த அதேமாதிரிதான் இந்திய தேசீய காங்கிரஸ் இப்பொழுது அதிகார வர்க்கத்தின் அதிகாரத்தையும், போலீஸையும் பாதுகாத்து நிற்

கிறது. தான் ஆளும் கட்சியாக இருக்கும் நிலைமையில், பிரிட்டிஷ் காரர்களால் உண்டாக்கப்பட்ட அதே கொள்ளை, சுரண்டல் முறை யைப் பாதுகாக்க முயற்சிக்கிறது. இன்றுள்ள அரசாங்க இயந் திரத்தையும், அத்துடன் அதிகாரவர்க்கம், போலீஸ் ஆகியவற்றின் ஆதிக்கத்தையும் மக்கள் ஜனநாயக அரசாங்கம் பரிபூர்ணமாக ஒழித்துக்கட்டும்.

மக்கள் ஜனநாயக அரசாங்கத்தின் எல்லா ஸ்தாபனங்களும், கீழிருந்து மேல்வரை, மக்களால் தேர்ந்தெடுக்கப்படும். மக்களின் நம்பிக்கைக்குப் புறம்பாக நடந்துகொள்ளும் எந்தப் பிரதிநிதியை யும், உத்தியோகப் பதவியிலிருந்து வெளியேறும்படி திருப்பி அழைக்க அம்மக்களுக்கு உரிமையுண்டு. அரசாங்கத்தின் எல்லா அதிகாரமும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்த அமைப்புக ளிடம்தான் இருக்கும். யாருக்கும் பொறுப்பில்லாத, பதவியி லிருந்து அகற்றப்பட முடியாத எந்த போலீஸ் அதிகாரியும், மக்களுக்கு மேலான ஸ்தானத்தில் இருக்கும் முறையில் மேலிருந்து நியமிக்கப்படமாட்டார்கள். எல்லா அதிகாரிகளும், உயர்தர அதி காரிகளும், கீழ்த்தர அதிகாரிகளும் மக்களால் தேர்ந்தெடுக்கப் படுவார்கள். அவர்கள் மக்களுக்குப் பொறுப்பானவர்களாக இருப் பார்கள். அவர்களை மக்களால் பதவிகளிலிருந்து அகற்றவும் முடி யும். இந்த உத்தியோகஸ்தர்களின் சம்பளங்கள் மக்களால் நிர் ணயிக்கப்படும். இன்றுள்ள போலீசுக்குப் பதிலாக மக்கள் பாது காப்புப் படை ஏற்படுத்தப்படும். அப்படையினர், மக்களால், மக்க ளாட்சியின் அமைப்புகள்மூலமாக பயிற்சி கொடுக்கப்பட்டு, வழி காட்டப்பட்டு, கட்டுப்படுத்தப்படுவர். அரசாங்கத்தின் இந்த அமைப்புகள், பரந்த வெகுஜனங்களின் உதவிகொண்டு வரிவசூல் களைச் செய்வார்கள். பிரதானமாக பணக்காரர்களிடமிருந்து வசூல் செய்து, மக்களின் நலன்களுக்காகச் செலவிடுவார்கள். நிலத்தை நியாயமாகப் பங்கிடுவது, பொருளுற்பத்தியை அதிகரிப் பது; சரியான வினியோகத்தை உத்திரவாதப் படுத்துவது; ஆகியவற்றிற்காக ஒரு வேலைத் திட்டத்தை இந்த அரசாங்க அமைப்புகள் நிறைவேற்றி வைக்கும். குடியிருப்பு ஸ்தலங்களை வினியோகம் செய்து, புதிய வீடுகளைக் கட்டுவார்கள். இதற்காக நிலத்தையும், வீடு கட்டுவதற்கவசியமான பொருள்களையும் தங்கள் வசப்படுத்திக்கொள்வார்கள். அகதிகள் புனர்வாழ்வு பெற உதவு வார்கள்; வியாதியும், அறியாமையும் போக்கப்படும், சமூக அடி மைத்தனத்திலிருந்தும், பொருளாதார அடிமைத்தனத்திலிருந்தும் பெண்களை விடுதலை செய்யும்; தேசிய மைனாரிடிகளைப் பாது காக்கும் மக்களின் விரோதிகளை எதிர்த்தும் லஞ்சத்தையும், இதர தீமைகளையும் எதிர்த்தும் போராடும்.

ஸ்தல ஆட்சி அமைப்புகளை அடிப்படையாகக்கொண்ட சர்க்கார், மக்களுக்காக நடைபெறும் சர்க்காராக இருக்கும். ஏனெனில் நாடு மக்களாலேயே நிர்வகிக்கப்படும். அத்தகைய ஒரு சர்க்கார் எப்பொழுதும் மக்களைக் கண்டு அஞ்சிக்கொண்டே இருக்கும் நிலைமையில் இருக்காது. ராணுவம், போலீஸ், அதிகாரவர்க்க இயந்திரம் ஆகியவைகளுக்கு இன்று செலவிடும் பெருந் தொகைகளைக் குறைத்து, நாட்டின் செல்வத்தை பிரதானமாக மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்காக உபயோகப்படுத்தும்.

கம்யூனிஸ்டு கட்சி, தாங்கள் பதவிக்கு வந்தால் என்னென்ன செய்யப்போகிறோமென்று, நிறைவேற்ற முடியாத அளவு கடந்த வாக்குறுதிகளை மக்களுக்கு அளிப்பதில்லை. மக்கள் கம்யூனிஸ்ட் கட்சிக்கு ஓட்டளித்தால், கம்யூனிஸ்ட் கட்சி என்ன செய்யும் என்று விபரமான, கவனமாகத் தயாரிக்கப்பட்ட திட்டங்களுடன் மக்களிடம் செல்வதில்லை. ஆனால், வறுமைக்கும், இழிவுக்கும் முற்றுப் புள்ளி வைப்பதற்கும், மக்களுக்கும் அவர்களின் குழந்தைகளுக்கும் ஒரு சுபீட்சமான வாழ்க்கையை அமைக்கவும், மக்கள் தங்களுடைய சொந்த சர்க்காரை ஏற்படுத்தி, அதிகாரத்தை தங்களுடைய கைகளிலேயே எடுத்துக்கொள்ளவேண்டும், என்று கம்யூனிஸ்ட் கட்சி மக்களிடம் கூறுகிறது.

அரசியலதிகாரம் மக்கள் கமிட்டிகளின் கைகளுக்கு மாற்றப் படுகிறதென்றால், சமூகமே அழிந்துவிடுவதற்கான அறிகுறி என்று மக்களின் விரோதிகள் கூக்குரலிடுவார்கள். "சட்டத்தையும், ஒழுங்கை"யும் புறக்கணிக்காமல், சமூகத்தை அராஜகத்திலும் குழப்பத்திலும் ஆழ்த்தாமல் அதிக சம்பளம் பெறும் அதிகாரவர்க்க இயந்திரத்தையும், பலம் பொருந்திய போலீஸ் இயந்திரத்தையும் எந்த சர்க்காரும் அழித்துவிட முடியாது என்று அவர்கள் கூறுவார்கள். புரட்சிப் பாதையிலிருந்து மக்களை மாற்று வழியில் திருப்புவதற்காக முயலும்போது ஆளும் வர்க்கத்தினர், எப்பொழுதும் இத்தகைய பேச்சுக்களையே பேசி வந்திருக்கின்றனர். அவர்கள் பாதுகாப்பதற்காக விரும்பும் சமூகம் அவர்களுடைய சமூகம்—கொள்ளையடிப்பதை அஸ்திவாரமாகக்கொண்டு அமைக்கப்பட்ட சமூகம் : அவர்கள் நிலைநிறுத்த விரும்பும் சட்டமும், அமைதியும் பணக்கார வர்க்கங்களின் ஆதிக்கத்தை நீடித்து சாஸ்வதமாக்கும் நோக்கத்திற்காகத்தான். அத்தகைய பேச்சு இனி ஒருபோதும் மக்களை ஆத்திரமூட்ட முடியாது.

ஒரு மக்கள் ஜனநாயக சர்க்காரால் வழிநடத்தப்பட்டு, உலகமே வியக்கத்தக்க வெற்றிகளை அடைந்துள்ள சீன மக்களின்

சிறிய உதாரணம் நம் கண்முன் நிற்கிறது. புதிய சீனு விவசாயி களை நிலப்பிரபுத்துவ அடிமைச் சங்கிலிகளின் கட்டுகளினின்றும் விடுதலை செய்தது; உணவுப்பொருள் உற்பத்தியில் ஒரு கோடி டன் அதிகரித்தது. சீனு இயந்திரத் தொழிற்சாலைகளையும், போக்குவரத்து சாதனங்களையும் அதி விரைவாகக் கட்டி வரு கிறது; தொத்து நோய்களை எதிர்த்துக் கடுமையான போராட் டம் நடத்திவருகிறது. மிகவும் பின்தங்கிய, நாட்டின் மூலைமுடுக்கு களிலுள்ள ஜில்லாக்களிலும், எல்லா மக்களுக்கும் இலவசக் கல்வி அளிக்கும் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவந்துள்ளது.

பல்லாண்டு பல்லாண்டுகளாக அடிமைத்தனத்தில் உழன்று வந்த சீனப் பெண்மணிகளை சீன சர்க்கார் அவ்வடிமைத்தனத்தி னின்றும் விடுதலை செய்துவிட்டது. தேசீய இனச் சண்டை களுக்கு முற்றுப்புள்ளி வைத்து நாட்டின் சரித்திரத்திலேயே என் றும் கண்டும் கேட்டுமிராதவாறு மக்களை ஐக்கியப்படுத்தியுள்ளது.

அன்னிய ஏகாதிபத்தியவாதிகளால் அடிமைப்படுத்தப்பட்ட பழைய சீனு, அவர்களின் கைக்கூலிகளால் கொள்ளையடிக்கப்பட்டு மிகவும் பின்தங்கிய நிலைமையிலும், பிறரை சார்ந்துதான் வாழ முடியும் என்ற நிலைமையிலும் இருந்த பழைய சீனு மறைந்து புதிய சீனு உதயமாகியுள்ளது; சுதந்திரமானதும், வலிமை வாய்ந் ததுமான, ஒரு சக்தி மிகுந்த உலக வல்லரசாகிவிட்டது; அது தன்னுடைய உதாரணத்தால், ஆசியாவின் எல்லா நாட்டு மக்களை யும் ஊக்குவித்து வருகிறது.

இவைகளனைத்தும் 1½ வருஷங்களுக்கும் குறைந்த கால அளவிலேயே சாதிக்கப் பட்டுள்ளன. சீனு நம்மைக்காட்டிலும் இன்னும் அதிக பிற்போக்குத் தனத்தில் சூழ்ந்திருந்த நாடு என் பதை நாம் மறந்துவிடக் கூடாது. நம்மைக் காட்டிலும் மிகவும் அதிக ஜனத்தொகைக்கு அது உணவளிக்க வேண்டியிருந்து. பல் லாண்டுகளாக தொடர்ந்து நடைபெற்ற நாசகரமான யுத்தங்களி னுல் அதனுடைய பொருளாதாரம் சீர்குலைந்து கிடந்தது. காங்கி ரஸ் சர்க்காரைத் தவிர வேறெந்த சர்க்காரும் நாட்டில் ஆட்சிபுரிந் திருக்க முடியாது என்றும், இந்த சர்க்காரை மக்கள் தூக்கி எறிந்து விட்டால் நாட்டின் பெரும்பாண்மை மக்களின் நிலைமை இன்றிருப்பதைக் காட்டிலும் மோசமாய்விடும் என்றும் இந்திய தேசீயக் காங்கிரஸ் தலைவர்கள் பச்சைப் பொய் சொல் வருகிறூர் கள். கொஞ்சங்கூட மாறுபாடின்றி இதே மாதிரிதான் சியாங்-கே ஷேக் சீன மக்களை பயமுறுத்த முயன்று வந்தான். ஆனுல், உண்மையில், சியாங்-கே-ஷேக் ஆட்சியின் அழிவு, மக்களை நாசத் தில் ஆழ்த்தவில்லை; ஆனுல் மக்களுக்கு சுபீட்சத்தையும் இன்பத்

தையுமே கொண்டுவந்தது. சீன மக்கள் என்ன செய்தார்களோ அதை நாமும் செய்யமுடியும். இந்தியாவில் இன்றைய ஆட்சிக்கு முடிவுகட்டி, ஒரு மக்கள் ஜனநாயக ஆட்சியை ஏற்படுத்துவதானது நம் மக்களுக்கு ஒரு புதிய சகாப்தத்தை தோற்றுவிப்பதைக் குறிக்கும்.

மேற்சொன்ன தீவிர ஜனநாயக மாறுதல்களைக் கொண்டு வருவதற்காக கம்யூனிஸ்ட் கட்சி சளைக்காமல் போராடும். அத்தகைய மாறுதல்களின்றி, மக்களின் வாழ்க்கை நிலைமைகளில் எந்த உண்மையான அபிவிருத்தியும் ஏற்பட முடியாது என்றும் நாட்டில் உண்மையான வளர்ச்சி ஏற்படாதென்றும் கம்யூனிஸ்ட்கட்சி மக்களிடம் சளைக்காமல் எடுத்துரைக்கும். அதே சமயத்தில், ஆரம்பகட்டத்தில், மேற்சொன்ன வேலைத் திட்டத்தில்: மக்களின் வாழ்க்கையில் சிறிய அளவிலாயினும் உடனடியாக அபிவிருத்தியை ஏற்படுத்தும் நடைமுறைத் திட்டங்களுக்காகப் போராடும் என்று கம்யூனிஸ்ட் கட்சி பிரகடனப்படுத்துகிறது. மேலும்,

—பிரிட்டிஷ் காமன்வெல்திலிருந்துவெளியேறுவதற்காகவும்,
—இந்திய ராணுவப் படைகளினின்றும் எல்லா பிரிட்டிஷ் காரர்களையும் அப்புறப் படுத்துவதற்காகவும்,
—சுதேச மன்னராட்சிகளை ஒழிப்பதற்காகவும்,
—மன்னர்களுக்கு எத்தகைய மான்யங்களும் கொடுப்பதை நிறுத்துவது,
—மொழிவாரி மாகாணங்களை உண்டாக்குவது,
—எல்லா அடக்குமுறை சட்டங்களையும் ரத்து செய்வது,
—எல்லா அரசியல் கைதிகளையும் விடுதலை செய்வது;
—நில வாடகையில் 50 சதவிகிதம் குறைப்பது,
—கடன் தவணைகளைத் தள்ளி வைப்பது,
—நிலத்திற்கேற்றாற்போல் வித்தியாசப்பட்ட நிலவரி,
—சாதாரண மக்களின் தோள்களில் பெரிய சுமையாக உள்ள வரிகளைக் குறைப்பது; பணக்காரர்களுக்கு அதிக வரி விதிப்பது,
—பேக்டரி தொழிலாளிகளுக்கும், ஆபீஸ் குமாஸ்தாக்களுக்கும் அதிக சம்பளம் கிடைக்கவேண்டுமென்பதற்காகவும்,
—தொழிற்சங்க உரிமைகளின் அங்கீகாரம் பெறுவதற்கும்,
—கல்விக் கட்டணங்கள் குறைவதற்காகவும்,
—வீட்டு வசதிகள் பங்கீடு செய்யப்படுவதற்கும்,
—உணவுப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு பயனுள்ள நடவடிக்கைகள் எடுக்கப்படுவதற்கும்,
—விலைவாசிகளை நிதானப்படுத்திக் கட்டுப் படுத்துவது,

—லஞ்ச ஊழலை எதிர்த்து விரைவான தீவிர நடவடிக்கைகள் எடுப்பது,
—பிற்பட்ட சமூகங்களுக்கு உதவி அளிப்பது,
—தேசிய மைனாரிடிகளுக்குப் பாதுபாப்பு அளிப்பது,
—ஸ்தல சுய ஆட்சி ஸ்தாபனங்களின் அதிகாரத்தை விஸ்தரிப்பது,
—பாகிஸ்தானுடன் ஒரு அனுக்ரமிப்பு ஒப்பந்தம் செய்து கொள்வது,
—காஷ்மீர் தகராறை ஐ. நா. சபையிலிருந்து வாபஸ் பெறுவது,
—ஐ. நா. மத்தியஸ்தரை நாட்டிலிருந்து வெளியேற்றி காஷ்மீர் தகராறை ஜனநாயக முறையிலும், சமாதானமான முறையிலும் தீர்த்து வைப்பது;
...தொடர்ச்சியான சமாதானக் கொள்கையைக் கடைப்பிடிப்பது,

ஆகியவைகளுக்காக கம்யூனிஸ்ட் கட்சி போராடும்.

இந்தக் கோரிக்கைகளை அடைவதற்காக, ஒரு வலிமை மிக்க வெகுஜன இயக்கத்தை உண்டாக்குவதன் பொருட்டு, இதர எல்லா ஜனநாயகக் கட்சிகளுடனும் கம்யூனிஸ்ட் கட்சி ஒத்துழைக்கும் உண்மையான ஜனநாயகக் கட்சிகள் அனைத்தும் கொண்ட ஒரு ஐக்ய முன்னணி, ஒரு சர்க்காரை அமைத்தால், அந்த சர்க்கார் மேற்சொன்ன திட்டத்தை அமுல் நடத்தும் அளவிற்கு கம்யூனிஸ்ட் கட்சி அதை ஆதரித்து நிற்கும்.

## ஒற்றுமை அத்தியாவசியமானது

மக்களின் ஒன்றுபட்ட போராட்டத்தினால் மட்டுமே இந்த லட்சியத்தை நிறைவேற்ற முடியும். ஒன்றுபட்ட நடவடிக்கை மூலம் தான் மக்கள் இன்றைய ஆட்சியாளர்களை முறியடித்து அவர்களை அப்புறப்படுத்த முடியும். இந்த ஒற்றுமை நம் நாட்டில் ஏகாதிபத்ய ஆட்சியை அழித்தொழிக்கும். விவசாயிகளுக்கு நிலமளிக்கும்; சகலருக்கும் உணவையும் வேலையையும் உத்திரவாதம் செய்யும்: சக்திவாய்ந்த சமாதான இயக்கமொன்று உருவாகுவதற்கு வழி வகுக்கும்; ஒரு மக்கள் சர்க்கார் அமைக்கப்படுவதற்குக் காரணமாயிருக்கும். இந்த ஒற்றுமையை நாம் வரப் போகும் நாட்களில் கட்டி வளர்த்தாகவேண்டும்.

இந்த கோரிக்கைகளைப் பூர்த்தி செய்வதற்கான போராட்டத்தில் மக்கள் ஐக்கியப் பட்டு நிற்பதின் மாபெரும் பிரதிபலிப்பாக தேர்தல்கள் மலரவேண்டும்; இந்த கோரிக்கைகளைப் பெறு

வதற்கு தேர்தல்கள் மக்களை ஒன்றுதிரட்ட வேண்டும். நம்மைத் தடுத்து ஒடுக்கிவரும் அடிமைத் தளைகளை உடைத்தெறிவோமென்னும் மக்களின் ஏகோபித்த வைராக்யத்தை இந்த தேர்தல்கள் பிரதிபலிக்கவேண்டும்.

மக்களின் ஒற்றுமையை ஏற்படுத்துவதற்கு இதற்குள்ளாகவே முக்கிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. பம்பாய் பஞ்சாலைத் தொழிலாளர்கள் ஐக்கிய தொழிற்சங்கமொன்றை சிருஷ்டிப்பதென்னும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த தங்கள் முடிவின் மூலம் இந்திய தொழிலாளி வர்க்கத்திற்கு ஒரு உதாரணம் கற்பித்தனர். பிரஜா உரிமைகளை மதிக்கும் ஒரு ஆட்சியை நாட்டில் அமைப்பது, உணவுப் பிரச்னையை பைசல் செய்வது, சமாதானத்திற்காகப் போராடுவது, கொரியாவில் ஏகாதிபத்திய தலையீட்டை எதிர்த்துப் போராடுவது போன்ற பல பிரச்னைகளிலும் திரள் திரளான மக்கட் பகுதியினர்—பல்வேறு கட்சிகளை ஆதரிக்கும் பகுதியினர் ஒன்றுபட்டு நின்று போராடினர், இயக்கம் நடத்தினர். ஹௌரா, ராஜனந்து குவான், பர்துவான், சந்திரநாகூர் முதலிய இடங்களில் முற்போக்கு சக்திகள் பெற்றுள்ள வெற்றி மகத்தான சக்திவாய்ந்த பரந்த ஐக்கிய இயக்கத்தின் வளர்ச்சியை கோடிட்டுக் காட்டுகிறது.

சென்ற நான்காண்டின் கொடிய அனுபவத்தை மனதிற் கொண்டு, மக்களின் சக்திகள் பொது விரோதிகளுக்கு எதிராய் ஒன்று திரண்டு வருகின்றன. இந்த வளர்ச்சி நீடித்து நடைபெறவேண்டும்; தொழிலாளர்கள் விவசாயிகள், வாலிபர்கள், பெண்கள் ஆகிய விரிவான வெகுஜனப் பகுதிகளின் ஐக்கிய ஸ்தாபனங்கள் நாடெங்கும் நிறுவப்பட வேண்டும்.

போதுமான கூலி கிடைப்பதற்காகவும் விலைவாசி உயர்வைத் தாக்குப்பிடிக்க கூலி உயர்வு பெறுவதற்கும் நிலச்சுவான் சுரண்டலையும் போலீஸ் பயங்கரத்தையும் எதிர்த்தும் கல்வி பெறும் உரிமைக்காகவும் அரசியல் கைதிகளின் விடுதலைக்காகவும் போராட்டத்தைத் தீவிரப்படுத்துவது அவசியமாகும். உலக சமாதான கவுன்ஸிலின் அறிக்கையில் லட்சக் கணக்கில் கையெழுத்து வாங்கியாகவேண்டும். சமாதானகோஷம் ஒவ்வொரு வீட்டிற்குள்ளும் நுழையவேண்டும்.

பாக்கிஸ்தானுக்கு எதிராக யுத்தம் வேண்டுமென்னும் பிரசாரத்தை எதிர்த்துப் போராடுவதும். மதவெறியையும் வகுப்புவாத குரோதங்களையும் தூண்டி விடுவோரை எதிர்த்துப் போராடும்படி மக்களைத் தட்டியெழுப்புவதும் அவசியமாகும்.

மக்களை எதிர்நோக்கும் சகல பிரச்னைகளையும் பைசல் செய்வதற்கு ஜனநாயக கட்சிகள், தனி நபர்களின் ஐக்கிய நடவடிக்கை கமிட்டிகள் ஒவ்வொரு இடத்திலும் நிறுவப் படவேண்டும், மக்களின் போர்க்குணம் படைத்த ஒற்றுமை ஏற்படவேண்டுமானால் தங்கள் பகைவர்களை முறியடித்து ஜன நாயகசக்திகள் வெற்றிபெறுவதற்கான உத்திரவாதமாய் விளங்கும் இந்த ஒற்றுமை ஏற்படவேண்டுமானால்—இவையாவும் அத்யா வசியமாகும். இவ்விதம் ஏற்படும் ஒற்றுமை தேர்தல் போராட்டத் தில் சக்திமிகுந்த ஆயுதமாகவும் பயன்படும்.

நம் மக்களின் பெரும் பகுதியின் ஆதரவைத் தேசிய காங்கி ரஸ் இழந்துவிட்டதென்பதை அது உணர்கிறது. அதன் வேண்டு கோள்களையும் அறைகூவல்களையும் மக்கள் மதிக்கவில்லை என்பது அதற்குத் தெரியும். இருந்தபோதிலும் தேசீய காங்கிரஸ், தன்னை எதிர்க்கும் ஜனநாயக சக்திகள் தங்கள் அணிகளை ஒன்று கூட்டி பலப்படுத்தத் தவறிவிடும்; தங்களுக்குள்ளேயே கிளம்பும் பூசல்களாலும் மோதுதல்களாலும் சக்தியிழந்து காங்கிரசிற்கு எதிராய் ஒன்றுபட்டு நிற்கும் வல்லமை இழந்து விடுமென்று எதிர்பார்க்கிறது. இந்த எண்ணம் நிறைவேறுமல் தடுக்கப்பட வேண்டும்,

மக்களின் ஜனநாயக ஒற்றுமையை சிருஷ்டிப்பதானது இன்று ஒரு பிரதான கடமையாகுமென்பதை உணரும்படி நாட்டிலுள்ள சகல ஜனநாயக சக்திகளையும் கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவி அழைக்கிறது.

மக்கள் தனக்கு ஓட்டளித்து தன்னை ஆட்சிபீடத்தில் அமர்த்தி விட்டால், தான் மக்களுக்காக செய்யப்போகும் சாதனைகளைச் சித்தரித்து புகழ்பாடுவதல்ல—இன்று ஜனநாயகக் கட்சியின் முன்னுள்ள வேலை. சக்திமிகுந்த ஐக்கிய வெகுஜன இயக்கத்தைக் கட்டுவதுதான் நம் அனைவர்மீதும் ஆட்சி செலுத்தி வரு வோரின் அதிகாரத்தை அகற்றக்கூடிய ஒரேஒரு சக்தியான இந்த வெகுஜன ஐக்கிய இயக்கத்தைக் கட்டுவதுதான் எல்லா ஜனநாயக கட்சிகள் முன்னுள்ள வேலை. தேர்தல் போராட்டம் வேலை திட் டங்களிடையே கிளம்பும் போராட்டமட்டும் அன்று. இன்றுள்ள சர்க்கார் மீண்டும் அதிகாரத்திற்கு வந்துவிட்டால், இந்த வேலைத் திட்டங்கள் யாவும் வெறும் காகிதத்திட்டங்களாகவே இயங்கும். எனவே தேர்தல் போராட்டமானது மக்கள் அனைவரையும் வெகு ஜனப்பகுதிகள் யாவற்றையும் இன்றைய சர்க்காருக்கு எதிராக ஒன்று திரண்டெழும்படிச் செய்வதற்கான போராட்டமாகும்.

தற்போதுள்ள அரசியல் சட்டத்தின்படி, மக்களுக்கு வாக்களிக்கும் உரிமை மட்டும்தான் உள்ளது; தாங்கள் வாக்களித்த அபேட்சகர்கள் அவர்களுடைய வாக்குறுதிகளை மீறுவார்களேயானல் அந்த அந்த அபேட்சகர்களைத் திருப்பி அழைக்கும் உரிமை நம் மக்களுக்கில்லை. ஆதலால், பொய்ப்பேச்சுகளை நம்பி மோசம் போகாமலிருக்கும் பொருட்டு யாருக்கு வாக்களிக்கும்படி தாங்கள் அழைக்கப்படுகின்றனரென்பது நம் மக்களுக்குத் தெரிந்திருக்கவேண்டும். ஒரு வகை எஜமானர்களுக்குப்பதில் மற்றொருவகை எஜமானர்கள் வருவதை மக்கள் விரும்பவில்லை. தங்களுடைய தலைவிதிக்குத் தாங்களே எஜமானர்களாகிவிட வேண்டுமென்பதே நம்மக்களின் விருப்பமாகும்.

முற்போக்குடைய ஜனநாயக கட்சிகளைச் சேர்ந்த அபேட்சகர்களையே பார்லிமென்ட் சட்டசபை அங்கத்தினர்களாக தேர்ந்தெடுப்பதற்கான சக்திமிகுந்த இயக்கத்திலிறங்குமாறு இந்திய மக்கள் அனைவரையும் கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவி அழைக்கிறது. பிற்போக்குவாதிகளும், இன்று ஜனநாயக வாய்வீச்சடித்துவரும் இந்துமகா சபா போன்ற பிற்போக்காளர் கட்சிகளும் விடுக்கும் பொய்ப்பிரகடனங்களையும், சமூக அமைப்பை அடியோடு மாற்றாமலே, மக்களின் தற்போதைய வறுமைக்கு வழிகோலி விட்டுள்ள வர்க்க ஆதிக்கத்தை அழித்தொழிக்காமலே, சீர்திருத்தங்களை செய்து முடிப்பதாய் வாக்குறுதி செய்வோரின் ஆசைவார்த்தைகளையும் நம்பி ஏமாற்றமடையக்கூடாதென்று கம்யூனிஸ்ட் கட்சி எல்லோருக்கும் அறைகூவல் விடுகிறது.

ஒவ்வொரு கட்சியையும், அபேட்சகரையும் அவருடைய வார்த்தைகளை மட்டுமின்றி அவருடைய செயலையும் கவனித்து, அவர் எந்த வர்க்கத்திற்காக உழைக்கிறார், மக்கள் முன்னுள்ள பிரச்னைகள் சம்பந்தமாக அவர்கள் எவ்வகையில் செயலாற்றுகின்றனர், என்பதையும் கணக்கிலெடுத்துதான் அவரைப்பற்றி நிர்ணயம் செய்யவேண்டும்.

சாதாரண மக்கள் முன்னுள்ள வேலை, ஓட்டுச்சாவடிக்குச் சென்று ஓட்டுப்போடுவது மட்டுமல்ல. எல்லா ஜனநாயக கட்சிகளையும், கோஷ்டிகளையும், தனி நபர்களையும் உடன்பாட்டிற்கு வந்து, ஒரே போக்கை ஆதரித்து நின்று ஒன்றுபட்ட போராட்டத்தில் ஈடுபடும்படிச் செய்வது சாதாரண மக்களுடைய வேலையாகும். தங்கள் அணிகளிலுள்ள வித்தியாசங்களை தங்கள் பகைவர்கள் உபயோகித்துக் கொண்டுவிடும்படி தடுப்பதும் சாதாரண மக்கள் முன்னுள்ள வேலையாகும். மக்கள் செயலற்ற வெறும் வாக்காளர்களாக மட்டுமிருந்து விடாமல், சுதந்திரத்திற்

காகவும் ஒவ்றுமைக்காகவும் நேரடியாகப் போராடும் வீரர்களாக இயங்கவேண்டும். இன்று அதிகாரத்திலுள்ளவர்கள் சுதந்திரத் தேர்தல்களைத் தடுப்பதற்குத் தங்களாலியன்றதனைத்தையும் செய்வார்கள் என்பது திண்ணம். பயங்கர நடவடிக்கைகளையும், பய முறுத்தலையும், வாய் வீச்சையும் ஜம்பப் பேச்சுகளையும் அவர்கள் மேற்கொள்வார்கள்; பணத்தின் பலத்தையும் நிலச்சுவான்கள் பெரும் முதலாளிகள் ஆகியோரின் நிர்ப்பந்தத்தையும் அவர்கள் உபயோகிப்பார்கள்; வகுப்புவாதத்தையும் மதப் பூசல்களையும் தூண்டிவிடுவார்கள். இந்தியாவிற்கும் பாகிஸ்தானுக்கு முள்ள உறவுகள் நெருக்கடிக்குட்பட்டிருப்பதை உபயோகித்துக்கொண்டு அதன் காரணமாய் தேசீய காங்கிரசையே யாவரும் ஆதரிக்க வேண்டுமென்று பிரசாரம் செய்வார்கள். மக்கள் தங்கள் விருப்பத்தை வெளியிடாமல் தடுக்கும் பொருட்டு அவர்கள் எதைவேண்டுமானாலும் செய்யத் துணிவார்கள். இவை யாவற்றிற்கும் மக்கள் தயாராயிருக்க வேண்டும். இந்த சதிகள் யாவற்றையும் மக்கள் முறியடிக்க வேண்டும்.

சென்ற இரண்டாண்டுகளாக சர்க்கார் வயதுவந்தோரனை வருக்கும் வாக்குரிமை என்னும் அடிப்படையில் தேர்தல்களை நடத்துவதாய் மீண்டும் மீண்டு வாக்குறுதி செய்துவந்தது; அவ் வாக்குறுதியை நிறைவேற்றுவதற்கு திரும்பத்திரும்ப மறுத்தது. நடைமுறை சிக்கல்களை எடுத்துக் கூறிற்று; வாக்காளர் ஜாபிதாவை தயாரிப்பதிலுள்ள கஷ்டங்கள் பற்றி பேசிற்று; ஆனால் இவையல்ல உண்மையான காரணம். தேர்தல்களின் முடிவு என்ன ஆகும் என்பது பற்றி ஆளும் வட்டாரங்களிடையே மேலும்மேலும் அதிகமாய் வளர்ந்த பீதியே உண்மையான காரணமாகும். நாட்டில் பற்பல இடங்களில் சமீபத்தில் நடைபெற்ற முனிசிபல் தேர்தல்களின் முடிவுகள் இந்த பீதியை மேலும் அதிகப்படுத்தின. நாட்டின் "அவசர நிலைமை"யைக் காரணமாகக் காட்டி தேர்தல்களை ஒத்திப் போடுவதற்கு சர்க்கார் மற்றுமோர் முறை முயற்சி செய்யக்கூடும். இதற்கு நம் மக்கள் இடமளிக்கக்கூடாது.

## கம்யூனிஸ்ட் கட்சி—சுதந்திரம், ஜனநாயகத்திற்குப் பாடுபடும் கட்சி.

கடினமான சூழ்நிலைமைகளின் கீழ் கம்யூனிஸ்ட் கட்சி தேர்தலில் பங்கு கொள்கிறது. அதன் ஆயிரக்கணக்கான அங்கத்தினர்களும், தலைவர்களும் சிறையில் கிடக்கின்றனர். அவர்களை விடுவிக்க இன்றுகூட மறுக்கிறது நேரு அரசாங்கம். அதன் மத்

தியக் கமிட்டி அங்கத்தினர்களில் பெரும்பான்மையோர் உள்பட, ஆயிரக்கணக்கான உறுப்பினர்கள் பகிரங்கமாக வெளியில் வரமுடியாதிருக்கின்றனர். தலை மறைவாக இருக்கும்படி நிர்ப்பந்திக்கப் பட்டுள்ளனர். கம்யூனிஸ்டுக் கட்சியின் ஸ்தலக் கமிட்டிகளில் பல, இன்றுங்கூட தலைமறைவாக இருக்கின்றன. கட்சி பலமாக உள்ள பிரதேசங்களில் மிருகத்தனமான இராணுவ, போலீஸ் பயங்கரம் கட்டவிழ்த்துவிடப் பட்டுள்ளது. தேர்தலில் பங்கு கொள்ளுவதை இவை உண்மையில் அசாத்தியமாக்குகின்றன. தேர்தலில் கட்சி அபேட்சகர்களாக நிற்கக்கூடியவர்களில் பெரும் பான்மையோரின் பெயர்கள் தேர்தல் ஜாபிதாவில் சேர்க்கப்படவில்லை.

இந்த இடையூறுகளையும் பொருட்படுத்தாது கம்யூனிஸ்டுக் கட்சி தேர்தலில் பங்கு கொள்ளும். முன்பு பிரிட்டிஷாரின் வெறுப்பிற்கும், கோபத்திற்கும் ஆளானதைப்போன்றே, இந்தியாவின் இன்றைய ஆளும் வர்க்கத்தின் வெறுப்பிற்கும், கோபத்திற்கும் தான் ஆளானது குறித்து கம்யூனிஸ்டுக் கட்சி பெருமைப்படுகிறது. தேசீய காங்கிரஸால் இந்தியாவுக்குக் கிடைத்த 'சுதந்திரத்தின்' உண்மையான தன்மையை பொதுமக்களுக்கு முன்னே முதன் முதலில், தான் அம்பலத்தியது குறித்தும் இந்த 'சுதந்திரத்திற்'கு எதிராக போராட்டத்தில் மக்களை, தான் தலைமை தாங்கி நடத்தியது குறித்தும், இதன் விளைவாக, சர்க்கார் தாக்குதல்களின் பிரதான இலக்காக தான் ஆக நேரிட்டது பற்றியும் கம்யூனிஸ்டுக் கட்சி பெருமைப்படுகிறது.

தான் தோன்றிய காலத்திலிருந்து, கட்சி எப்பொழுதும் மக்களுக்காகவே பணியாற்றி வந்துள்ளது. தொழிலாள வர்க்கத்தின் உழைக்கும் விவசாயிகளின், கட்சியென சுரண்டப்படும் வெகு ஜனங்களின் கட்சியென, கம்யூனிஸ்டுக் கட்சி தன் செய்கைகளின் மூலம் நிரூபித்துக் காட்டியுள்ளது.

மகத்தான தொழிலாள வர்க்க இயக்கத்திற்கு கம்யூனிஸ்டுகள் தான் அஸ்திவாரம் அமைத்தார்கள். எண்ணற்ற வேலைநிறுத்தங்களை நடத்தினார்கள். 8-மணி நேர வேலை நாளை வெற்றிபெற்றுக் கொடுத்தார்கள். உயிர்வாழ குறைந்த அளவு தேவையையும், சமூக பந்தோபஸ்து கோட்பாட்டையும் ஏற்றுக்கொள்ளுமாறு ஆளும் வர்க்கங்களை நிர்ப்பந்தித்தனர்.

இந்திய நாட்டில் செங்கொடி ஏற்றி வைத்தவர்கள் கம்யூனிஸ்டுகள்தான். தொழிலாள வர்க்கத்திடம், சோஷலிஸக் கருத்துக்களைக் கொணர்ந்தார்கள். சர்வதேச தொழிலாள வர்க்க இயக்கத்துடன் அதை இணைத்தார்கள்.

ஏகாதிபத்திய ஆட்சியிலிருந்து மக்களின் விடுதலைக்காகவும், ஜனநாயகத்திற்காகவும் போராட்டத்தில் தொழிலாள வர்க்கத்திற்குத் தலைமை தாங்கி நடத்தியது கம்யூனிஸ்டுகள்தான்.

பல்லாயிரக்கணக்கான கம்யூனிஸ்டுகள் சிறைக் கூடங்களிலும், காவல் முகாங்களிலும் தள்ளப்பட்டனர். ஆயிரக்கணக்கானவர்கள் சித்திரவதை செய்யப்பட்டு கொல்லப்பட்டனர். ஆனால், அடக்குமுறையாளரின் எதிரே செங்கொடி என்றும் தலைவணங்கியதில்லை.

நிலத்திற்காகப் போராடும் பொருட்டுத் தங்களுக்கென சொந்தமாக ஒரு ஸ்தாபனம் தேவை என முதன் முதலில் கம்யூனிஸ்டுகள் தான் விவசாயி மக்களுக்கு எடுத்துரைத்து ஒப்புக்கொள்ளும்படி செய்தனர். நிலப்பிரபுக்கள், முதலாளிகளின் மனிதத் தன்மையற்ற சுரண்டலுக்கெதிராக விவசாயிகளின், விவசாயத் தொழிலாளர்களின் போராட்டங்களை இந்தியா முழுவதிலும் கம்யூனிஸ்டுகள் தலைமை தாங்கி நடத்தினார்கள். வங்காளத்தில் ‘தெபாகா’ போராட்டத்திலும், மலபாரில் அரிசிக்கான போராட்டத்திலும், ஹைதராபாத் சமஸ்தானத் தெலுங்கானா பிரதேசத்தில் நிலத்திற்கான போராட்டத்திலும், கம்யூனிஸ்டுகள் விவசாயிகளுக்குத்தலைமை தாங்கினார்கள்.

மாணவர்கள், ஆசிரியர்கள், குமஸ்தாக்கள், பத்திரிகையாளர், அகதிகள், வீடுவாசல் அற்றவர்கள் முதலியோரின் ஒவ்வொரு நடவடிக்கைக்கும் ஆதரவாக கம்யூனிஸ்டுகள் அவர்களுடன் சேர்ந்து நின்றார்கள்.

மற்றொரு உலக யுத்த அபாயத்தைத் தெளிவாக கண்ணுற நம் மக்களுக்கு கம்யூனிஸ்டுக் கட்சியும் அதன் உறுப்பினர்களும் உதவி செய்தனர். யுத்த அபாயத்தையும், இந்த யுத்தத்தைத் தூண்டிவிடும் ஆங்கில-அமெரிக்க ஏகாதிபத்யவாதிகளையும் எதிர்த்துப் போராட லட்சோபலட்சக் கணககான மக்களை ஒன்று திரட்டினர்.

வகுப்புவாத மதவெறிகொண்ட பிற்போக்காளர்களுக் கெதிராக கம்யூனிஸ்டுகள் சற்றும் வளைந்து கொடாது உறுதியுடன் போராடினார்கள். தங்கள் உயிர்களைத் திரணமெனக் கருதி, வகுப்புவாத மதவெறிப் படுகொலை மத்தியில் சிக்கிக்கொண்ட மக்களைக் காப்பாற்றினார்கள்.

இவ்வெல்லாப் போராட்டங்களின் தலைமைப் பீடத்திலிருந்த கம்யூனிஸ்டுகள் பிரமைகள் அற்றவராக இல்லை. தவறுகள் இழைக்காமல் இல்லை. ஆனால் உள்ளத்தில் சிரத்தை கொண்ட போர் வீரர்களாக அவர்கள் விளங்கியதால், தங்கள் தவறுகளை எப்

பொழுதும் பகிரங்கமாகவே ஒப்புக்கொண்டார்கள். அவைகளைத் திருத்திக் கொண்டார்கள். அடக்குமுறையாளரின் கருணைக்கு எதிர்நோக்கியிருக்கும்படி மக்களை அவர்கள் என்றும் கைவிட்டதில்லை. அவர்கள் எப்பொழுதும் வெகு ஜனங்களுடனே நின்றார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்யவாதிகளின், அவர்களின் தற்கால வாரீசுகளான தேசீய காங்கிரஸ் ஆளும் வர்க்கத்தினரின் மிருகத்தனமான சித்திரவதைகளுக்கிடையே, தங்கள் சொந்த உயிர்களையும் சொத்துக்களையும் இழக்க வேண்டி நேரிட்டபோதும், பொது ஜனங்களின் நலன்களைக் கம்யூனிஸ்டுகள் என்றுமே பாதுகாத்தார்கள். மக்களுக்குக் கற்றுக்கொடுக்க மாத்திரமல்ல, ஆனல் அவர்களிடமிருந்து கற்றுக்கொள்ளவும் கம்யூனிஸ்டுகள் என்றுமே தயாராயிருந்தார்கள்.

தேச விடுதலைக்கும், மக்கள் ஜனநாயகத்திற்கும் பாடுபடும் கட்சியென, கம்யூனிஸ்டுக் கட்சி இன்று மக்கள் முன்னல் நிற்கிறது. சுதந்திரம் சுபீட்சமடைய, நிலமும் உணவும் பெற, ஜனநாயகம் சமாதானம் அடைய நடக்கும் மகோன்னதமான போராட்டத்தில் நம் மக்கள் அனைவரையும் ஒன்றுபடுத்த பிரதிக்ஞை செய்து கொண்ட கட்சியாக கம்யூனிஸ்டுக் கட்சி இன்று மக்கள் முன்னல் நிற்கிறது. மக்களின் மகத்தான வீரம் செறிந்த, தன்னலமற்ற போராட்டத் தீயில் புடம் போட்டு எடுக்கப்பட்ட கட்சியாக, தொழிலாளர்கள், விவசாயிகள், படித்த கூட்டம் மற்றும் நம் சமூகத்தின் எல்லா ஜனநாயகப் பகுதியினரின் மிக்க செயல் திறனுடைய மக்கள் அனைவரையும் தன்னுடைய அணிக்குள் ஆகர்ஷிக்கும் கட்சியாக கம்யூனிஸ்டுக் கட்சி மக்கள் முன்னல் நிற்கிறது.

தன்னுடைய அபேட்சகர்களையும், ஜனநாயகக் கட்சிகளின் அபேட்சகர்களையும் ஆதரிக்குமாறு பொதுமக்களை அறைகூவி அழைக்கிறது கம்யூனிஸ்டுக் கட்சி.

யுத்த பிற்கால வருடங்களில் லட்சோப லட்சக்கணக்கான இந்திய மக்கள் பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் அஸ்திவாரங்களையே பிடுங்கி யெறிய குமுறி எழுந்தார்கள். மக்கள் எதை எதிர்த்துப் போராடினர்களோ அதே அமைப்பு முறையை பாதுகாத்து நின்ற தேசீய காங்கிரசின் மேலாதிக்கத்திற்கு சமாதி கட்ட மீண்டும் கோடிக்கணக்கான மக்கள் செயலில் இறங்கவேண்டும்.

**தேசீய காங்கிரஸை முறியடிக்க**
**மக்கள் அபேட்சகர்களின் வெற்றிக்கு உத்திரவாதம் அளிக்க**
**மக்கள் சர்க்காரை நிறுவ**
**அனைவரும் ஒன்று திரண்டு ஓட் அளியுங்கள்.**

The Selvam Press—Madras-2.

- ○ பிரிட்டிஷ் காமன்வெல்த்திலிருந்து வெளியேற
- ○ இந்திய இராணுவத்திலிருக்கும் பிரிட்டிஷ் அதிகாரிகளை அப்புறப்படுத்த
- ○ பிரிட்டிஷ் மூலதனத்தைப் பறிமுதல் செய்ய
- ○ சுதேச மன்னராட்சியை ஒழிக்க
- ○ மொழிவாரி மாகாணங்களை உண்டாக்க
- ○ எல்லா அடக்குமுறை சட்டங்களையும் ரத்து செய்ய
- ○ விவசாயக் கடன்களை ரத்துசெய்ய
- ○ நிலவரியைப் பாதியாகக் குறைக்க
- ○ இதர வரிகளையும் குறைக்க
- ○ தொழிற்சங்க உரிமைகளுக்காக
- ○ சம்பள உயர்வுக்காக, வேலைப்பளு குறைவிற்காக
- ○ பஞ்சத்தையும், லஞ்சத்தையும் ஒழிக்க
- ○ நிரந்தர சமாதானத்திற்காக

**கம்யூனிஸ்ட் கட்சி போராடும்.**



வரப்போகும் பொதுத் தேர்தலில்

இந்திய மக்களின் பொது விரோதியான

**காங்கிரசுக்கு கல்லறை கட்டுங்கள்.**